52/4

# குன்றக்குடி அடிகளார்

## (வாழ்க்கை வரலாறு)

எழுதியவர்

எம்.எஸ்.பி.சண்முகம் எம்.ஏ.
('தமிழ்நாடு' துணையாசிரியர்)

வெளியீடு



பரிமளா பதிப்பகம் மதுரை.





## கலைத்தந்தை கருமுத்து

உண்மை ஓங்கவேண்டும் என்னும் குறிக்கோள் உடையவர்கள் கலைத்தந்தை திரு. கருமுத்து தியாகராசச்செட்டியார் அவர்கள். சைவமும் தமிழும் தழைக்க வேண்டுமென்று உள்ளூரச் சிந்தைசெய்து வாழும் அப்பெருமகனார், அன்பு, ஆன்ற புலமை, அருந்தமிழ்ப் பண்பு ஆகிய அனைத்தும் கொண்டு அடக்கமாக வாழ்ந்து, தமிழையும் வாழ்விக்கின்றார்கள். அத் தமிழ்ப்பெருந்தகையாரின் சைவப்பற்றும் சீலமும் கண்டு அவர்களது பொன்னடிகட்கு என் சிறிய முயற்சியில் எழுந்த இந்நூலை உரித்தாக்குகின்றேன்,

எம். எஸ். பி. சண்முகம் M. A.

# முன்னுரை

உண்மையான வரலாற்றுச் செய்திகளைத் தரவேண்டும் என்னும் எண்ணத்தில் குன்றக்குடி அடிகளார் வாழ்க்கை வரலாற்றை எழுத முற்படுகின்றேன். பொதுவாக மடாதிபதிகளின் வாழ்க்கையை யார் எழுதப் புகுந்தாலும் பொது மக்கள் அதனை வெறும் புகழுரை நூலாக இருக்கும் என்றே கருதுவார்கள். இயல்பான செய்திகளும் மிகையான கூற்றாகவே தோன்றும். வெறும் புகழுரையாயில்லாமல் வரலாற்று நூல்களை எழுதுவோர்க்கு இந்நூல் ஓர் எடுத்துக் காட்டாய் இலங்க வேண்டும் என்பது என் விருப்பம்.

குன்றக்குடி அடிகளாருடன், அவர் இப்பெயருள்ள அடிகளாராக ஆவதற்கு முன்பிருந்தே, நெருங்கிய தொடர்பு கொள்ளும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அவருடன் பழகிய சிறிது காலத்திற்குள் திருமடத்திலுள்ள தம்பிரான்கள் பலரும், சிப்பந்திகளும் எனக்கு நன்கு அறிமுகமாயினர். திருமடத்து நிகழ்ச்சிகள் அனைத்தையும் நான் அறிந்துகொள்ளும் அளவிற்கு அங்குள்ள சிலர் என் நெருங்கிய நண்பர்களுமாயினர். இந்நூல் எழுத நான் மனம் துணிந்ததற்கு இந்தத் துணைதான் மிகுந்த ஆதாரமாயிருந்து தூண்டியது.

மாபெரும் தலைவர்கள் வாழ்க்கை வரலாற்றை அவர்களது வாழ்நாட் காலத்திலேயே எழுதும்போது பல இடர்ப்பாடுகள் வந்து சேரும். எதை எந்த அளவு கூறவேண்டு

மென்பதில் சிற்சில சமயம் பல மணி நேரம் எடைபோட வேண்டியதிருக்கும். அச்சமயங்களில் உலகுக்குப் பயன் படும் உண்மை வரலாறு எப்படி எந்த அளவில் இருக்க வேண்டும் என்னும் அளவுகோலையே வழிகாட்டியாகக் கொண்டு எழுதுகின்றேன். எனது உறுதிமொழிகள் முழு தும் நிறைவேற இறையருள் கூட்டுமாக.

இந்நூல் குறைவின்றி நிறைவுபெற நல்லுதவி புரிந்த பெருமக்கள் பலர். செய்தி தந்து உதவியவர்களுள் சிறப்பாக என். எஸ். கோபாலகிருஷ்ணபிள்ளை, திருவண்ணுமலை ஆதீ னம் ஸ்ரீமத் சபாபதித் தம்பிரான், சிவத்திரு, ம. க. சுந்தரேச பட்டர் ஆகியவர்களைக் குறிப்பிடவேண்டும். அணிந்துரை தந்து ஆர்வமொழி கூறியவர்களுள் தமிழ்வள்ளல் திரு. மெய்யப்பசெட்டியார் அவர்கள் என்றுமே என் மறவா அன்புக்குரியவர்களாவார்கள். தெ. பொ. மீ. யோ எனின் அவர் எனது பேராசிரியர். இவர்களுக்கெல்லாம் நான் கடமைப்பட்டிருக்கிறேன் என்று புதிதாகக் கூறுவது மிகை யாகத் தோன்றுகிறது.

இந்நூல் சிறப்பாக அச்சாகி வெளிவர நிறைந்த ஆர்வங் காட்டியவர்கள் பதிப்பகத்தார் தான். ஆறுமாதங்கள் வரை இந்த நூலைக் கொண்டுவருவதற்கு அவர்கள் காட்டிய பொறுமை பெரிதாகும். பொறுப்பான பல அலுவல் களிடையே எனக்குக் கிடைத்த ஓய்வுநேரத்தில் என்னல் இந்நூலை விரைந்துமுடிக்க இயலாமற் போயிற்று.

எனினும் விடாது பல நடை நடந்து என்னை ஊக்கிய I. N. S. பரிமளா பதிப்பக உரிமையாளர்களுக்கு நான் மிக நன்றிகூறக் கடமைப்பட்டவன். நல்ல நூல்களைப் பதிப்பிப்பதில் மிகுந்த ஆர்வங்காட்டும் இப்பதிப்பகம் தமிழன்பர்களின் நல்லாதரவால் மேன்மேலும் வளர்ச்சியடையுமாக.

பழுத்த தமிழ்க் கவிஞரான கவிமணி அவர்கள் படுத்த படுக்கையிலிருந்து கொண்டு என்பால் வைத்த நல்லன்பால் உதவிய வாழ்த்துக்களுக்கு நான் எவ்வளவு தான் நன்றி கூறினும் அது அதற்கு ஈடாகாது. அவர்களுடைய நல்வாழ்த்தினைப் பெறும் பேற்றினைத் தந்த இறை திருவருளை வாழ்த்துகின்றேன்.

மதுரை,
10-7-54.

**எம். எஸ். பி. சண்முகம் எம். ஏ.**
துணை ஆசிரியர், "தமிழ்நாடு"





1-2-53ல் மதுரையில் திரு. கருமுத்து தியாகராசன் செட்டியார் தலைமையில் திருவாசக விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. அவ்விழாவின் போது நடைபெற்ற ஊர்வலத்தில் திரு. செட்டியார் அவர்களும் (இடதுகோடி) அடிகளாரும் ராங்கியம் நா. வ. லெ. இலக்குமணன் செட்டியார் (வலது கோடி) முதலிய நல்லன்பர்களும் கலந்துகொண்டார்கள். அடிகளார் 'ஆர்ந்தகண்ணருவி தாரைகொள்ள இருகைகளஞ்சலி கொளக் கசிந்துருகித், திருவாசகபாராயணம் செய்து வரும் காட்சியைப் படத்தில் காணலாம்.

———

# அணிந்துரை

பன்மொழிப்புலவர், வித்துவான்,
தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், எம். ஏ; பி. எல்; எம் ஓ. எல்.
பேராசிரியர், சென்னை மாநிலக்கல்லூரி, சென்னை.

இன்று தமிழ்நாடெங்கும் குன்றக்குடி அடிகளாருடைய பெயர் கேட்கப்படுகிறது. ஐந்தாண்டுக்குள் தமிழர் கண்ணையும், காதையும், கருத்தையும் இப்பெரியார் கவர்ந்துவிட்ட வியப்பினைக் காண்கிருேம். அறிவு பரந்த நெற்றி, அன்பு கனிந்த கண்கள், அருள் புன்னகையாகத் தவழும் முகம், சைவத் தமிழின்பம் திரண்டொழுகும் சொற்பெருக்கு, இவ்வாறு ஒரு தோற்றம். இவரை நினைக்கும்பொழுது நம் உள்ளக் கண்ணெதிர் எழுகிறது. விரல் விட்டு எண்ணக்கூடிய சொற்பொழிவாளர்களில் இவரும் ஒருவர் என்று ஒரு குரலாக எல்லோரும் கூறி வருகின்றனர். இந்தப் பண்பாட்டின் விளக்கத்தை வரன்முறையாய் அறியத் தமிழ்நாடு மிகமிக விரும்புகிறது.

வாழ்க்கை வரலாறு இந்நாளைய உலகத்தில் சிறந்து விளங்கும் புத்தம் புதிய இலக்கியத்துறையாகும். புராணம் பாடி உயிரோவியத்தை வரைய முனைந்தார்கள் பழைய புலவர்கள். இந்நாளைய உலகமோ அத்தகைய கற்பனைக் காட்சியில் விளக்கம் ஒன்றும் பெறுவதில்லை. உண்மை நிகழ்ச்சிகளைக் கோவை செய்து ஆசிரியன் எழுதுகின்ற போக்கிலே தான் அத்தகைய விளக்கத்தைக் காணவிழைகின்றது. இந்த வகையில் எனது நண்பர் திரு. சண்முகனுர் தமது புலமை

சான்ற சொற்களின் திறமைகொண்டு அடிகளாரைக் கட்டிப்பிடித்து வந்து நம் கண்ணெதிரே நிறுத்திவைத்து, அவர் உருவான வரலாற்றை நம் உளம்கொளக் கூறுகிறார். அதில் அவர் சிறந்த வெற்றியும் காண்கின்றார்.

நண்பர் திரு. சண்முகனாரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மாணவராக அறிந்ததுமுதல் அவர் வளர்ச்சியைக் கண்டு வருகிறேன். பல ஆண்டுகள் நாளிதழ் உலகில் பெற்ற தம் நிறைந்த அனுபவத்தினைப் பயன்படுத்தி அவர் எழுதிய இந்நூலின் சிறப்பைக்கண்டு மகிழ்கின்றேன். புதுமையும் பழமையும் உலகம் இன்புறக் கலந்திணையும் அழகினைக் காணும் கண் படைத்தவர் நம் நண்பர். அக் காட்சியினை அவர் எழுதிய இவ் வாழ்க்கை வரலாற்றிலும் காண்கிறோம். தமது முன்னுரையில் தம் நோக்கினையும், நூலின் போக்கினையும் நன்றாக விளக்கியிருக்கிறார் அவர். அதில் கூறியுள்ளபடி முயற்சியில் வெற்றியே கண்டுள்ளார் என இந்நூலைப் படிப்பவர் ஒவ்வொருவரும் உறுதி கூறுவர்.

சென்னை,
1-7-54.

(ஒப்.) தெ. பொ. மீனாட்சிசுந்தரன்.

# அணிந்துரை

சைவசித்தாந்தப் புரவலர்
உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார்,
தேவகோட்டை.

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தில் மகா சந்நிதானமாக வீற்றிருக்கும் அடிகளார் அவர்களுடன் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து பழகும் வாய்ப்பு எனக்கு உண்டு. அவர்கள் செய்துவரும் சமயத் தொண்டும் தமிழ்த் தொண்டும் அறிஞர் உலகம் போற்றத் தக்க வகையில் அ... ந்துள்ளன. அவர்கள் தமிழ்ப் பெருமக்கள் வாழும் ஊர்தோறும் — என் வீடுதோறும் — சென்று தமது தேனூறு போன்ற சொற்பொழிவுகளால் மக்களைச் சமயப் பாதையில் திருப்பிக்கொண்டு வருகிறார்கள். அவர்களுடைய சொற்பொழிவுகளைக் கருத்துக் கருவூலம் எனலாம். அடிகளாருடைய சொற்பொழிவுகளை எத்தனை முறை கேட்டாலும் சலிப்பதில்லை. அவர்கள் பேச எடுத்துக்கொண்ட பொருளைப படிப்படியாக வளர்த்துக் கூறிச் செல்லும் முறையும், இறுதியில் அனைத்தையும் தொகுத்துக் கூறும் அழகும் போற்றத் தக்கவை. அவர்களது பேச்சும் தொண்டும் தமிழகத்திற்குக் கிடைத்த அரும்பெரும் பேறுகள் என்றே சொல்ல வேண்டும். செயலாற்றுவதிலும் அடிகளார் மிகவும் வல்லவர். எண்ணிய செயலை எண்ணிய வண்ணமே இனிது முடிக்கும் திறன் அவர்கள் பால் அமைந்திருக்கின்றது. பழந் தமிழ் நூல்களில் அடிகளார் அவர்களுக்கு ஆழ்ந்த பயிற்சி உண்டு. சிறப்பாக உலகப்

பொதுமறையாகிய திருக்குறளிலும், தெய்வத் திருமறை யாகிய திருவாசகத்திலும் அவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. திருவாசகம் ஓதுங்கால் அவர்கள் மனங் கசிந்து கண்ணீர் சொரியும் காட்சி கண்டவர் மனத்தை உருக்கும்.

இவ்வாறு சமயத் தொண்டிலும், செயலாற்றும் திறத்திலும் தமிழ் நூற் கல்வியிலும் சிறந்து விளங்கும் அடிகளாரது வாழ்க்கை வரலாற்றை மதுரை, "தமிழ்நாடு" துணை ஆசிரியர் திருவாளர் எம். எஸ். பி. சண்முகம் எம். ஏ. அவர்கள் எழுதியுள்ளார்கள். அவர்கள் தமிழில் நிறைந்த பயிற்சியும் ஆர்வமும் உடையவர்கள். தலைசிறந்த எழுத்தாளர். அடிகளார் அவர்களுடன் நெருங்கிய தொடர்பு உடையவர்கள். அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றை எழுதப் பெரும் தகுதியுடையவர்கள்.

நூலினுள் நுழைந்து பார்த்தேன். தெளிவான நடை, சுவையான வர்ணனை, அடிகளாரைப் பற்றிய அரிய செய்திகள் – இவை இந்நூலுக்கு அழகு செய்துள்ளன.

தமிழகத்தில் பெருந் தொண்டு செய்துவரும் குன்றக்குடி அடிகளார் வாழ்க்கை வரலாற்றை மக்கள் அறிந்து கொள்ளும்வண்ணம் ஒரு நூல் வெளிவர வேண்டியது மிகவும் அவசியம். அவ்வகையில் இந்நூலை ஆக்கித் தந்த திருவாளர் எம். எஸ். பி. சண்முகம் அவர்களுக்கு எல்லா நலன்களையும் அருளுமாறு இறையருளைச் சிந்திக்கிறேன்.

தேவகோட்டை,
9—6—1954

(ஒப்) உ. ராம மெ. சுப. சேவு. மெ.
**மெய்யப்ப செட்டியார்.**

# பதிப்புரை

குன்றக்குடி அடிகளாரின் வாழ்க்கை வரலாற்றைத் தமிழகத்திற்கு எங்கள் முதல் வெளியீடாக அளிப்பதில் நாங்கள் பெரிதும் மகிழ்ச்சியடைகிறோம்.

உலகினை அருள்வழியிலே அழைத்துச் செல்ல முயற்சி செய்கின்ற பெரியார்களின் வரலாறுகள் பெரும்பாலும் குறித்து வைக்கப்படுவதில்லை. அரசியல் தலைவர்களின் வரலாறுகள் நாட்டிற்கு வீரமும் கடமையுணர்ச்சியும் போதிக்குமெனில், அதைப் போலவே அருளியல் பெரியார்களின் வரலாறுகள் நாட்டை அன்பு வழியில் இழுத்துச் செல்வனவாகும். இதனாலேயே இன்று நாட்டில் சமய எழுச்சியை உண்டாக்கி வரும் சைவத் துறவியான குன்றக்குடி அடிகளாரின் வாழ்க்கை வரலாற்றை வெளியிட நாங்கள் முன் வந்தோம்.

வரலாற்றை எழுதித் தர எல்லா வகையாலும் தகுதி பெற்ற ஆசிரியர் எங்கட்கு கிடைத்தது பெரும் பேறெனவே கூறவேண்டும். திரு. எம். எஸ். பி. சண்முகம், எம். ஏ. அவர்கள் இக்காலத்து மக்கள் விரும்பும் தெள்ளிய இனிய தமிழ் நடையில் எழுதுவதில் மிக வல்லவர்கள். "இலக்கியநடை என்று கூறி வாசகர்களது நேரத்தை வீணே கவர்ந்துகொள்ளாமல் எதையும் சுவையோடு மக்கள் படித்து இன்புறுமாறு எழுதுவதுதான் சிறந்த நடை" என்று அவர்கள் அடிக்கடி கூறுவார்கள். தனித் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடும் "தமிழ்நாடு" இதழின் துணை ஆசிரியராகவிருப்பதனால்

அவர்களுடைய தமிழ் நடையில் பிற மொழிச் சொற்கள் மிக அருகியே காணப்படுகின்றன. இது குறிப்பிடத்தக்க ஒன்ருகும்.

ஆசிரியர், அடிகளாருடன் நெருங்கிய தொடர்புடைய வராயிருந்தும் விருப்பு வெறுப்பின்றி நடுநிலையில் நின்று வரலாற்றை எழுதித் தந்திருக்கிருர். அடிகளாரின் வரலாற்றைத் தருவதோடு நில்லாமல், பொதுவாகத் தமிழ்நாட்டுத் திருமடங்களைப் பற்றிப் பொதுமக்கள் அறியவேண்டிய பல செய்திகளையும் அவர் தந்திருக்கிருர். வரலாற்று நூல் எழுது வோர்கள் தமக்குக்கிடைக்கும் செய்திகளை வைத்துக் கொண்டு பட்டியல் போலத்தான் எழுதவேண்டியிருக்கும். ஆசிரியர் கற்பனைக்கு அதில் இடமிராது. ஆயினும் வரலாற்று நூலையும் சுவையுற எழுதமுடியுமென்பதைத் திரு. எம். எஸ். பி. சண்முகம் அவர்கள் இந்நூலில்மெய்ப்பித்திருக்கிருர்கள். தமது பல அலுவல்களுக்கிடையே இந்நூலை எழுதித்தந்த அவர்களுக்கு எங்கள்நன்றி உரித்தாகுக. கடைசி நேரத்தில் உதவிநாடிச் சென்றபோது மிகுந்த உள்ளன்பு காட்டி எங்களுக்குப் பல உதவிகள் செய்ய முன்வந்த ராஜா பிஸ்கட் கம்பெனி உரிமையாளர் திரு. ஆ. சங்குப்பிள்ளையவர்களை நாங்கள் மிகவும் வாழ்த்திப் போற்றக் கடமைப் பட்டுள்ளோம்.

மதுரை,
10–7–54.

**கே. இளையபெருமாள்**
**என். நாராயணன்**
**ஆர். வி. சௌந்தரராஜ்**
I. N. S. பரிமளா பதிப்பக உரிமையாளர்கள்

# வாழ்த்து

கவிமணி. தேசிகவிநாயகம்பிள்ளை அவர்கள்
புத்தேரி, நாகர்கோவில்.

---

சைவம் வளரத் தமிழ் வளரச்
சலியா தென்றும் தொண்டாற்றி
வையம் புகழ நல்லறங்கள்
வளர்த்து நாட்டில் புலவர்களை
மெய்யன் போடு பாராட்டும்
மேலோன் அருணா சலவடிகள்
ஐயன் குன்றக் குடிமுருகன்
அருளால் வாழ்க வாழ்கவே.

இனிய தமிழில் சைவத்தை
எவரும் அறிய எடுத்தோதி
கனியும் அன்பால் அறம்பேணிக்
கற்றோர் போற்ற விளங்கிடுநம்
புனிதன் அருணா சலவடிகள்
புகழ்சேர் வாழ்க்கை வரலாறு
நனியிவ் வுலகில் சிறந்தோங்கி
நாளும் வாழ்க வாழ்கவே.

---

அறுப்புச்சிகிச்சை பெற்று நோய்ப்படுக்கையில் இருந்தபோது கவிமணி அவர்கள். 5—6—54-ல் இவ் வாழ்த்துப்பாக்களை எழுதித்தந்தார்கள்.

வேறு

சைவம் பரவத் தருமம் தழைத்துவரச்
செய்ய தமிழும் சிறந்தோங்க–வையமிசை
குன்றக் குடியெம் குருநாதன் தொண்டாற்றி
என்றென்றும் வாழ்க இனிது

மெய்யறிவே எத்திசையும் மேலோங்க வீண் வாதப்
பொய்யழிந்து பாதலம் புக்கொழியச்-செய்யபுகழ்
ஐயனெம் அண்ணல் அருணு சலவடிகள்
வையமிசை வாழ்க மகிழ்ந்து

வேறு

செய்ய தமிழும் சிவநெறியும்
சிறக்கத் தொண்டு புரிந்திடுவோன்
ஐயன் குன்றக் குடிஅடிகள்
அருணு சலதே சிகநாதன்
தையல் பாகன் தன்னருளால்
சமயச் செங்கோல் இனிதோச்சி
வையம் புகழப் பல்லாண்டு
வாழ்க வாழ்க வாழ்கவே.





சேவுமெய்யப்ப செட்டியாருக்கும் பண்டிதமணிக்கும் ராஜா சர் தலைமையில் நடந்த பாராட்டு

# கும்பிடப்போன தெய்வம்

திருவண்ணுமலையில் திருக்கார்த்திகை விசேடமென்பார்கள். அண்ணுமலையார் துணையைக் கைவிடாத செட்டிநாட்டுப் பெருமக்களுக்கு அடுத்தபடியாகத் திருக்கார்த்திகை சிறப்பாகக் கருதப்படும் இடம் குன்றக்குடி. அமைப்பாலும், பெருமையாலும் செட்டிநாட்டின் நடுநாயகமாக விளங்குவது இத்தலம். ஒரு காலத்தில் செட்டிநாட்டின் கவனம் முழுவதையும் அங்கு மலைமீது எழுந்தருளியிருக்கும் சண்முகப்பெருமான் இரண்டறக் கவர்ந்திருந்தார். அந்தக் காலத்தில் யாதந்தோறும் கார்த்திகை நாளில் எல்லா ஊர்களிலு



மிருந்து கூட்டங் கூட்டமாகக் குன்றக்குடிக்கு மக்கள் போய் வருவார்கள். கார்த்திகையன்று குறிப்பிட்டாற்போல்போக முடியாதவர்கள் ஏனைய நாட்களில் வாய்ப்பு வரும்போதெல்லாம் அங்கே சென்று முருகப்பெருமானை வழிபட்டு வரத் தவறுவதில்லை.

1951-ம் ஆண்டு குன்றக்குடிக்குச் செல்ல அப்படி ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. எங்கள் ஊர்ச் சிவநேசச் செல்வர் [1] ஒருவர் "குன்றக்குடி செல்கிறேன். வருகிறாயா?' என்று என்னை ஒரு நாள் அழைத்தார். தமிழ்ப் பெரும்புலவர் [2] ஒருவருக்கு அங்கு ஒரு பாராட்டு நடைபெற விருந்தது. அதைக்காணவே அவர் சென்றார். நெடு நாட்களாக நான் குன்றக்குடி சண்முகப் பெருமானை வழிபட ஆவல்கொண்டிருந்தேன். அந்த வாய்ப்பை வைத்துக்கொண்டு அப்பெருமானை வழிபட்டு வருவோமென்று கருதி உடனே புறப்பட்டேன். திருவண்ணாமலை ஆதீன மடத்தில் சென்று (திருவண்ணாமலையில் அல்ல; குன்றக்குடியில் உள்ள அப்பெயருள்ள ஆதீன மடத்தில்) எங்கள் இயந்திர ஊர்தி (Motor-Car) நின்றது. எங்கள் ஊர்ப் பெரியமனிதர் ஆதீனத்திற்குள் நுழைந்தார்.

---

1 சி. ராம, மு. லெ. இலக்குமணன் செட்டியார், கொத்தமங்கலம்

2 பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாருக்கு

அங்கே முன்வாயிலில் பல தமிழன்பர்களும் செட்டிநாட்டின் தலைசிறந்த செல்வர்களும் இருந்தார்கள். சிறிது நேரத்தில் அங்கிருந்த எல்லோருமாகச் "சாமியைப் பார்ப்போம்" என்று கூறி உள்ளே சென்றனர். நானும் உடன் தொடர்ந்தேன். உள்ளே, ***தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியும் தாழ்வடமும் உடைய ஒருவர்*** ஓர் உயர்ந்த இருக்கையில் வீற்றிருந்தார். சென்ற புலவர்களும் செல்வர்களும் ஒருவர்பின் ஒருவராக அவர்முன் உடலெல்லாம் தரையில் படிய விழுந்து கும்பிட்டெழுந்தார்கள். திருக்கோலத்திலிருந்தவர் இளம்வயதினராயிருந்தும் வயதிற் பழுத்தவர்களும் செல்வத்திற் செழித்தவர்களும் விழுந்து விழுந்து கும்பிடுவது எனக்கு வியப்பாயிருந்தது. கும்பிடும் வரிசையில் என்முறை நெருங்கியது. எனக்குமுன் நின்றவர் ஒரு பேராசிரியர். அவரும் என்னைப்போலவே, "கும்பிடுவதா வேண்டாமா" என்ற ஐயத்தில் நின்றுகொண்டிருந்ததை நான் உணர்ந்து கொண்டேன். நாம் "**கும்பிட வந்த தெய்வம்**" மலைமேல் அல்லவா இருக்கின்றது என்று எண்ணிக்கொண்டேன். "பூமியிலெவர்க்குமினி அடிமை செய்யோம், பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்" என்ற மகுடமிட்டுப் [1] பத்திரிகை நடத்திய என் பழைய கால நினைவு எனக்கு

---

1 'சுயராஜ்யம்' மாதமிருமுறை இதழ்
ஆசிரியர் எம். எஸ். பி. சண்முகம், எம். ஏ.,

வந்தது. "மனிதனை மனிதன் வணங்கும் பழக்கம் அந்தக் காலம்" என்று ஒரு பக்கம் என் மனம் கூறியது. இவ்விதக் கருத்துக்களால்தானே என்னவோ, என் முன்னின்ற பேராசிரியர் உடலை வளையாமல் தலையால் மட்டும் வணக்கம் செய்துவிட்டு மெதுவாக நகர்ந்துவிட்டார். நான் உடலையோ தலையையோ ஒன்றையுமே வளையாமல் ஒதுங்கி வந்துவிட்டேன். தவவேடத்தவரைக் காரணமில்லாமல் இவ்வளவுபேரும் வணங்குவார்களா என்று அன்று நான் ஆராயவில்லை.

தமிழ்ப் பஞ்சாங்கத்தில் ஓராண்டு மாறிற்று. நாள் காட்டும் ஆங்கிலக் 'காலண்டரில்' மட்டும் 1951-ம்ஆண்டுதான் நடந்து கொண்டிருந்தது. அதற்குள் நான் இரண்டாவது முறை குன்றக்குடிக்கு ஓர் அலுவலாய்ச் சென்றிருந்தேன். திருவண்ணாமலை ஆதீன மடத்திற்கும் சென்றேன். அப்பொழுது




என் மனநிலை முற்றிலும் மாறியிருந்தது. முதலில் குன்றக்குடியில் எந்த இடத்தில் யாரைக் கும்பிடப்போன தெய்வம் அல்ல என்று கருதிக் கும்பிடாமல் ஒதுங்கி வந்தேனே அந்த இடத்தில் அதே தவத் திருக்கோலத்தவரை நான் மனமார, மெய் முழுவதும் தரையில் படிய, விழுந்து விழுந்து ஒருமுறை, இருமுறை, மும்முறை கும்பிட்டேன். சொன்னால் நம்பமாட்டீர்கள்; அதே

நாளில், அதே இடத்தில், முன்பு என்னுடன் ஓதுங்கிப்போந்த பேராசிரியரும் எனக்கு முன்னமே விழுந்து, பணிந்து அவரைக் கும்பிட்டுக் கொண்டிருந்தார். கும்பிடப்பட்டவர் இளம் வயதினராயிற்றே என்ற எண்ணம் எங்கள் இருவர் உள்ளத்திலும் அப்போது தோன்றவில்லை. என்னுடைய நடத்தையில் இந்தப் பெரிய மாறுபாட்டிற்குக் காரணம் என்னவென்று கேட்பீர்கள் அல்லவா? ஒருவேளை, தவக்கோலத்தினர் ஓதும் ஐந்தெழுத்தின் .பெருமையென்று நீங்கள் எண்ணலாம். ஐந்தெழுத்துப் பெருமையுடையது தான். ஆனால் ஐந்தெழுத்தைவிட இந்தக் காலம் மூன்றெழுத்துக்களுக்கு அதிகப் பெருமை தரும் காலமாக மாறிவிட்டது. மூன்றெழுத்தால் இந்த உலகில் எந்தச்செயலை வேண்டுமானாலும் சாதிக்கலாம்; யாரை வேண்டுமானாலும் பணிய வைக்கலாம். அப்படி ஒரு மூன்றெழுத்துத்தான் என்னையும் பேராசிரியரையும் குன்றக்குடியில் அடிகளாரிடம் பணிய வைத்தது. எங்களைப் பணிய வைத்த அந்த மூன்றெழுத்து "**தொண்டு**" என்பதாகும். அடிகளாரின் தொண்டின் உறுதிப்பாடு கண்டு நான் அவரை ஒருமுறை பணிந்தேன். அவருடைய தமிழ்ப் "***புலமை***"க்காக மறுமுறை பணிந்தேன், அவர் என்னிடம் அன்று காட்டிய '**அன்பு**'க்காக மூன்றும் முறையும் அவரைப் பணிந்தேன். சமயத்தொண்டு, தமிழ்ப்புலமை, தக்காரிடத்து நல்லன்பு ஆகிய இம்மூன்றையும்

ஒருங்கே குறிக்கோளாய்க்கொண்டு விளங்கி வரும் இத்தவக்கோலத்தவர் குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீனத்தின் தலைவராவார். அவர் அந்த ஆதீனத்தில் 1949-ம் ஆண்டில்தான் இள வரசராகப் பட்டமேற்ருர். குன்றக்குடியில் திரு வண்ணுமலை ஆதீனம் என்ற பெயரில் ஓர் ஆதீ னம் இருக்கிறதென்பதும், அதில் திருக்கைலாய பரம்பரையைச் சேர்ந்த சைவத் துறவிகள் அரு ளாட்சி செய்து வருகிருர்கள் என்பதும் 1949-ம் ஆண்டுக்குமுன் பலருக்குத் தெரிந்ததில்லை. குன் றக்குடி முன்பெல்லாம் முருகன் வழிபாட்டுத் தலமாக மட்டும் விளங்கியது. முருகனை வழிபட வந்த அன்பர்களைத் தம் பக்கத்திலும் திருப்பிச் சமயத்தொண்டு பல நிகழும் இடமாகக் குன்றக் குடியின் சிறப்பை நம் அடிகளார் வளப்படுத்தி விட்டார். அடிகளாரின் தொண்டு மனப்பான் மையின் காரணமாக அவரிடம் வரும் தொண்டர் கூட்டம் நாளுக்கு நாள் பெருகி வருகிறது. இள வரசுப்பட்டம் ஏற்ற நான்காண்டுகளுக்குள் அவர் தமிழ்நாடு முழுவதும் தெரிந்தவராகிவிட் டார். **மிகக் குறுகியகால எல்லையில் இவ்வளவு விரிவான புகழ் எய்தியவர்களைச் சமயத்துறையி லும் வேறு அரசியல் முதலிய எத்துறையிலும் காண்பது மிக மிக அரிது.** என்வே, அத்தகை யார் வாழ்க்கை வரலாற்றில் உலகம் கவனம் செலுத்துவது பயன்தரும் செயலேயன்ருே?

அவர் எங்கே பிறந்தார்? எக்காரணத்தால் இந்நன்னிலை யடைந்தார்? அவர் வெற்றிப்பாதையின் இரகசியம் என்ன? இவ்வினக்களுக்கு விடை காண்போம்.



# புரட்சிக்கார அடிகளார்

தஞ்சை மாவட்டம் தமிழகத்தின் தலைசிறந்த பகுதியாகும். காவிரி நீரும் கலைவாணர்களின் சிறப்பும் பெற்றது அம்மாவட்டம். "தண்ணீரும் காவிரியே தார்வேந்தனும் சோழன் மண்ணாவதும் சோழ மண்டலமே" என்று பாராட்டப்பெற்ற நீர் நாட்டில் தஞ்சை மாவட்டம் இன்றும் அன்றும் சைவத்தையும் தமிழையும் போற்றிக் காக்கும் தனிப் பெருமையுடையது. சைவமும் தமிழும் வளர்க்கத் தக்க பல தொண்டு செய்துவரும் அற நிலையங்களான திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை ஆகிய திருமடங்கள் தஞ்சை மாவட்டத்திலேயே அமைந்திருப்பது இதற்கு ஒரு எடுத்துக்காட்டாகும். இத்தகைய பெருமையுடைய தஞ்சை தந்த செல்வந்தான் நம் திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார்.

தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திற்கு அருகிலுள்ள திருவாளபுத்தூரில் நடுத்திட்டு என்னுமிடத்தில் 1925-ம் ஆண்டு ஜூலை 11-ம்தேதி அவர் தோன்றினர். சைவ சமயத்தலைவராய் இன்று விளங்கும் அடிகளாரின் பிள்ளைத் திருநாமம் ரங்கநாதன் என்பதாகும். அவருடைய தந்தையின் பெயர் சீனிவாசம் பிள்ளை என்பது. தாயார் சொர்ணத்தாச்சி. அவரது தமையன்

மார் இருவருள் ஒருவர் கோபாலகிருஷ்ணபிள்ளை மற்றெருவர் பாண்டுரங்கம்பிள்ளை. இவர்களுடைய தாத்தா பெயர் இராம கிருஷ்ண பிள்ளை. அடிகளாரின் குடும்பத்தில் இப்படி எல்லோருடைய பெயர்களும் வைணவப் பெயர்களாய் இருக்கத் தாமும் சீ ரங்கநாதனைத்திருவவதாரம் செய்து, (சீனிவாசம் பிள்ளையின் மகன் ரங்கநாதன்) ரங்கநாதனுக்குரிய காத்தற்றெழிலைச் சைவத்திற்கும், தமிழுக்கும் செய்து வரும் அடிகள் செயல் அவரைப் புரட்சிக்காரர்என்னும் பட்டத்திற்கு உரியவராக்குகின்றது.

புரட்சிக்காரர் என்று அடிகளை அழைக்குமுன் பல சிந்தனைகள் எனக்கு வருகின்றன. புரட்சி என்னும் சொல்லைக் கேட்டதுமே உலகம் நடுநடுங்கிய காலம் உண்டு. புரட்சிக்காரர்களுக்கு உலகில் கிடைக்கும் பரிசு தூக்குமேடைதான். உலகம் தோன்றிய காலம் முதல் சமய உலகிலும் சமுதாய உலகிலும் பல புரட்சிக்காரர்கள் தோன்றியிருக்கிறார்கள். இயேசு, நபி, சாக்ரடீஸ், லூதர் முதலிய புரட்சிக்காரர்கள் சமய உலகில் தோன்றியவர்கள். லிங்கன், மகாத்மா, கெலிலியோ போன்றவர்கள் சமுதாயத்தைத் திருத்தத் தோன்றியவர்கள். அவர்களெல்லோரும் உண்மைக்காகவே தங்கள் ஆயுள் முழுவதும் பாடுபட்டுங்கூட இறுதியில் தூக்குத் தண்டனையை – துப்பாக்கிக் குண்டை – துன்பத்தைத்தான் அடைந்தார்கள். அவர்களை உலகிற்கு வேண்டாதவர்களாக

இயற்கை நியதியை மாற்றியமைக்க முயல்கிற புரட்சிக்காரர்களாகத்தான்-அன்று உலகம் கருதியது. ஆகவே அவர்களை அடாத கொடுமைகளுக்கும் உள்ளாக்கியது.

அந்தக் காலமாக இருந்தால் அடிகளாரைப் புரட்சிக்காரர் என்று உலகிற்கு எடுத்த எடுப்பிலேயே அறிமுகப்படுத்துவதற்கு நான் மிக அஞ்சுவேன். ஆனால் இன்று உலகம் மாறிவிட்டது. புரட்சி என்னும் சொல்லுக்கு அது அஞ்சுவதில்லை. புரட்சி ஓங்குக என்னும் முழக்கமும் 'ஒழிக' என்னும் கூச்சலும் இந்த இருபதாம் நூற்றுண்டில் பெருகி வருகின்றன. அவை பெருகப்பெருக மக்களும் ஆக்கப் புரட்சிக்கும் அழிவுப் புரட்சிக்கும் உள்ள வேறுபாட்டையும் உணர்ந்து வருகிறுர்கள். ஒழிக' என்னும் கூச்சலை மாற்ற "வாழ்க" (நமசிவாய வாழ்க) என்னும் முழக்கத்தை நாடெங்கும் எழுப்பும் அடிகளாரை வரவேற்கிறுர்கள். அவர்களைப் போன்ற ஆக்கப் புரட்சியாளர் நாட்டிற்கு வேண்டுமெனவும் நினைக்கிறுர்கள். எனவேதான் நான் அடிகளாருக்கும்புரட்சிக்காரர் என்னும்பெயரைத் தயங்காமல் சூட்டுகிறேன்.



நான் மட்டிலுமல்ல, இன்று தமிழகத்தில் பலர் அவரைப் **புரட்சிக்கார அடிகளார்** என்றே கூறுகிறுர்கள். அடிகளார் தொடங்கிய புரட்சிகளுள் முதன்மையானது கோயில்

களில் தேவார திருவாசங்களைக்கொண்டு தமிழில் அர்ச்சனை செய்ய வேண்டுமென்பதாகும்.

காலத்துக்குக் காலம் மாறுபட்டு வருவன 'சம் பிரதாயங்கள். அவைகளை இந்தக் காலத்துக்கு ஏற்றபடி எளிமையானதாக்கி விடவேண்டு மென்று எண்ணுபவர் அடிகளார். மக்களின் கண் ணிலேயே படாமல் மடாதிபதிகள் வாழ்ந்து வந் ததனல் ஏற்பட்ட தீய எண்ணங்களை அகற்ற அவர் விரும்பினர். திருமடத்துச் சம்பிரதாயங் கள் என்னும் கட்டை அவிழ்த்துக்கொண்டு வெளி வந்து எல்லோரிடத்தும் நெருங்கிய தொடர்பு கொள்ள முற்பட்டார். அஃது அவரது இரண்டா வது புரட்சியாகும்.

மனம் விரும்பியவாறு வாழ்வதற்கேற்ற வகை அவருக்கு இருக்கிறது. எனினும், அவற்றையெல் லாம் விடுத்துத் துறவு இலக்கணத்துக்கேற்ற படி எளிமையாக உண்டு உடுத்து வருகிருர். எடுத்தவற்றிற்கெல்லாம் ஏவலாளர்கள் துணையை நாடாதவராய் அவர் வாழ்கிருர். அவரது புரட்சி உள்ளத்திற்கு இவையும் எடுத்துக்காட்டுக் களாம்.

அடிகளார் அளவுகடந்த தமிழ்ப்பற்றுடைய வர். அவர் கொண்டுள்ள அப்பற்றின் காரணமா கவே தமிழ் அருச்சனைப் புரட்சியை அவர் முத லில் தொடங்கினர். அவரிடம் தமிழ்ப்பற்று அவ்

வளவு தூரம் ஏற்படுவதற்குத் தமிழகக் கலைக் கோயிலாய்த் திகழும் தஞ்சை மாவட்டத்தில் அவர் பிறந்தது மட்டும் காரணம் என்று கூறிவிட முடியாது. அப்படிக் கூறினல் செட்டி நாட்டவர் ஒருவேளை சண்டைக்கு வந்தாலும் வந்துவிடுவார் கள். அவர் துறவு பூணுவதற்கு முன்பே பல ஆண்டுகள் செட்டிநாட்டு மண்ணில் வாழ்ந்தது தான் அவரது தமிழ்ப்பற்றுக்குக் காரணம் என் பது அந்நாட்டன்பர்களின் கருத்து. செட்டிநாடு, தமிழ்ப்புலவர்கள் நிறைந்த தமிழகப் பகுதி. தமி ழறிஞர்களுக்கு ஆதரவளிப்பதிலும், தமிழ்க் காவி யங்களைச் சுவைத்து மகிழ்வதிலும், சைவ சமயப் பணிகளிலும் அப்பகுதி மக்கள் சிறந்த ஆர்வம் காட்டுபவர்கள்.

செட்டிநாட்டரசர் சிதம்பரத்தில் சென்று ஒரு தமிழ்ப் பல்கலைக் கழகம் கட்டினர். தொண்டை நாட்டன்பர் ஒருவர் ஒருமுறை அதனைப்பற்றிக் குறிப்பிடுகையில் "தமிழ் எங்கே சிறந்திருக் கிறதோ அங்கே தானே தமிழ்க்கலைக் கழகங் களைக் கட்டவேண்டும். அதனல்தான் செட்டி நாட்டரசர் பாண்டிய நாட்டவராயிருந்தும் சிதம் பரத்தைப் பல்கலைக் கழகம் கட்ட உரிய இடமா கத் தேர்ந்தெடுத்தார்" என்று கூறினர். உடனே செட்டிநாட்டுக்காரர் ஒருவருக்கு ஆத்திரம் வந்து விட்டது. ',தமிழ்ப்பற்றும் தமிழ்ப் புலமையும் யாருக்கு எங்கு இல்லையோ அங்கே கொண்டு

போய்த்தானே தமிழ்க் கல்லூரிகளைக் கட்டவேண்டும். கொல்லன் தெருவில் யாரேனும் ஊசி விற்பார்களா? உங்கள் நாட்டில் தமிழ்ப்பற்றுக் குறைந்திருந்ததனால்தான் '*ராஜா சர்,*' சிதம்பரத்தில் பல்கலைக் கழகம் கட்டினார்' என்று கூறிச் சண்டைக்குக் கிளம்பிவிட்டார். அத்தகைய தமிழ்ப்பற்றுடையவர்கள் செட்டிநாட்டவர்களாதலினாலேயே நான் எச்சரிக்கையோடு கூறுகிறேன்.

அடிகளார்து தமிழ்ப் பற்று செட்டிநாட்டுத் தொடர்பாலும் வளர்ந்தது என்று கூறுவதிலும் மிகுந்த உண்மையிருக்கிறது. அடிகளார் தமது இளமைக் காலத்தில் பெரும் பகுதியைச் செட்டி நாட்டைச் சேர்ந்த கடியாபட்டி (இராமச்சந்திர புரம்) என்னும் சிற்றூரிலேயே கழித்திருக்கிறார். அவர் உயர்நிலைப் பள்ளிக் கல்வி பயின்றதே அவ்வூரில்தான். அன்றைய செட்டிநாட்டின் சூழ்நிலை அவரது தமிழ்ப்பற்று வளர்வதற்குத் துணை செய்திருக்கிறது.

குழந்தையா யிருக்கும்போது சில ஆண்டுகள் வரையிலுமே அடிகளார் தம்முடைய பிறந்த ஊரில் இருந்திருக்கிறார். அதற்குப் பிறகு அண்ணாமலை நகரில் அவர் சிலகாலம் வசித்தார். அடுத்துப் பல ஆண்டுகள் இராமச்சந்திரபுரத்தில்

தமிழாசிரியர் வேலைபார்த்த தம் தமையன் கோபாலகிருஷ்ண பிள்ளையுடனேயே இருந்து வந்திருக்கிறார், எனவே கோபாலகிஷ்ருண பிள்ளையைப்பற்றி நாம் இங்கே சிறிது தெரிந்து கொண்டுதான் ஆகவேண்டும்.

---



ஸ்ரீனிவாசம்பிள்ளை சொர்ணத்தாச்சி

# துறவு பூண்ட காரணம்

---

கோபால கிருஷ்ணபிள்ளை சீனிவாசம்பிள்ளையின் மூத்த புதல்வர். சீனிவாசம் பிள்ளையின் குடும்பம் ஒரு நடுத்தரக் குடும்பம்தான். குடும்பத்தை நடத்தச் சிறிது வருவாய் வரக்கூடிய நிலபுலன்களும் ஒரு சிறு வீடும் அவருக்கிருந்தன. அவை மட்டும் இருந்தால் போதுமா? மூத்த பையனைப் படிக்க வைத்தால் அவன் முன்னேறிச் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றுவானென்று சீனிவாசம் பிள்ளை எண்ணினர். மாயவரம் வட்டாரத்திலுள்ளவர்கள் தம் பிள்ளைகளைப் படிக்கவைக்க வேண்டும் என்று கருதியதும் முதலில் அவர்களது எண்ணத்தில் உதிப்பது வித்வான் பட்டப் படிப்புத்தான். ஏனெனில் அப்படிப்பைச் செலவில்லாமல் சொல்லிக் கொடுப்பதற்குத் தஞ்சை மாவட்டத்தில் தமிழ்க் கல்லூரிகள் பல இருக்கின்றன. இலவசமாய்த்தான் படிக்கவேண்டுமென்ற கட்டாயமில்லாதவர்கள் கொஞ்சம் செலவழித்தால் படிப்பதற்கு அண்ணமலை நகரில் புலவர் கல்லூரி இருக்கிறது. வித்வான் வகுப்பில் சேர ஒருவருக்கு ஆரம்பப் பள்ளியில் எட்டாம் வகுப்பு வரை படித்த அறிவு இருந்தால் போதுமானது.

கல்லூரியில் சேர்ந்து, ஐந்து ஆண்டுகள் உழைத்துப் படித்தால் வித்வான் பட்டத்துடன் வெளியேறி வேலைக்கும் போய்விடலாம். இக்காரணங்களால், ஒரு காலத்தில் தஞ்சை மாவட்டத்திலிருந்து புலவர் கல்லூரிகளுக்கு வரும் மாணவர்கள் தொகை மிகுதியாகக் காணப்பட்டது. சீனிவாசம் பிள்ளை தம் மூத்த பையனை வித்வான் படிப்புப் படிக்கவைக்கக் கருதி அண்ணாமலை நகர் சென்றார். படிப்பு முடியும்வரை தம் குடும்பத்துடன் அண்ணாமலை நகரிலேயே தங்கினார். குழந்தைகள் படிக்குங்காலத்தில் பால்மாடு வைத்து வியாபாரம் செய்து குடும்பத்தின் வருவாயைப் பெருக்கி வந்தார் சொர்ணத்தாச்சி. அப்போது ரங்கநாதன் மெய்யாத்தூர் என்ற ஊரில் தன்னுடைய தமக்கையார் வீட்டில் வசித்து வந்தான். ஏதோ காரணமாக ரெங்கநாதனை அவர் அத்தான் ஒருநாள் அடித்துவிட்டாராம். அடிபட்டதில் வந்த கோபம் அவனுக்கு அண்ணாமலை நகரில் வசிக்கும் வாய்ப்பை அளித்துவிட்டது. இவ்வாய்ப்பு அவனுக்குப் பெறுதற்கரியவேறொரு வாய்ப்பையும் அன்று நல்கியது.

இலங்கை ஈன்ற துறவியும் தமிழுக்காகத் தம் வாழ்நாட்காலம் முழுவதையும் செலவிட்ட பெரியாருமான விபுலானந்த அடிகள் 1930முதல் 1933வரை அண்ணாமலை நகரில் தமிழ்த்துறைத் தலைவராகப் பதவி ஏற்றிருந்தார். அவர் வசித்த

வீட்டிற்கு அண்மையில்தான் சீனிவாசம்பிள்ளை குடும்பமும் வசித்தது. எந்நேரமும் மலர்ந்த முகத்துடன் ஓடி ஆடித் திரியும் சிறுவனுயிருந்த ரெங்கநாதனின்மீது விபுலானந்த அடிகளின் பார்வை விழுந்தது. நெற்றி நிறைந்த விபூதியும் நிர்மலமான உள்ளமும் படைத்த அச் சிறுவனை அடிக்கடி அவர் அன்போடு அழைப்பார்; மடியிலே கூப்பிட்டு வைத்துக்கொண்டு கொஞ்சுவார்; வீட்டு வேலைகள் ஏதாவது இருந்தாலும் சொல்லுவார். தமிழ்த் துறவி ஒருவரிடத்து இவ்விதப் பெருமைகளெல்லாம் அடைந்த ரெங்கநாதனுக்குத் துறவுக்கோலத்தினர்மீது ஓர் உயர்வான எண்ணமும் பற்றும் தோன்றின. விபுலானந்த அடிகள் ரெங்கநாதனுக்கு அன்போடு இரண்டு அறிவுரைகள் கூறிவந்தார். "கடவுளை நம்பு," "தமிழைப் படி" என்ற அவரது அந்த இரண்டு அறிவுரைகளும் ரெங்கநாதன் உள்ளத்தில் அழுந்தப் பதிந்துவிட்டன. அவற்றை மறக்காமல் கடைப்பிடித்ததனுலேயே இன்று அடிகளார்



தமிழகத்தில் மிக விரைவில் அதியுன்னத நிலைக்கு வரமுடிந்தது என்று கூறினல் அது மிகையாகாது.

ஆறு வயது நிரம்பாத ரெங்கநாதன் அடிக்கடி விபுலானந்தர் வீட்டுக்குச் செல்வான். அவர் எங்கே-புறப்பட்டுச் சென்ருலும் அவருக்குமுன்பே சென்று தானும் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொள்வான். வண்டியை விட்டு இறங்கச்சொல்லிக் கட்டாயப்படுத்திஞல் அழத்தொடங்கி விடுவான். குழந்தை ரெங்கநாதனுக்கு விபுலானந்த அடிகள்மீது அன்று அவ்வளவு பற்று ஏற்பட்டு இருந்திருக்கிறது. கடைசியில் அவர் இலங்கைக்குச் செல்லும்பொழுது தன்னையும் அழைத்துச் செல்லவேண்டுமென்று ரெங்கநாதன் பிடிவாதம் பிடித்திருக்கிருன். இதஞல் அவனுக்குத் தெரியாமலேயே விபுலானந்தர் இலங்கைக்குப் புறப்பட்டுச் செல்ல நேர்ந்ததாம்.



குழந்தை ரெங்கஞதன் விபுலானந்த அடிகளுடன் பழகியதோடு நிற்கவில்லை. அண்ணுமலை நகரில் அக்காலத்தில் வசித்த ஆர். பி, சேதுப் பிள்ளை வீட்டிற்கும் அவன் சென்றுவரும் பழக்கத்தைக் கொண்டிருந்திருக்கிருன். யாருடனும் திடீரென உரிமையுடன் பழகிவிடும் இயல்பு அவனுக்கு இளமையிலேயே உண்டு. ரெங்கஞதனுக்குப் பள்ளிக்கூடத்தில் சாரணர் படையில் சேர

வேண்டுமென்று ஒருமுறை ஆவல் ஏற்பட்டிருக்கிறது. தந்தையிடம் சென்று அதற்குச் சட்டை முதலாயின வேண்டுமென்று கேட்டிருக்கிருன். அவர் வாங்கிக் கொடுக்கவில்லை. உடனே ஏனைய மாணவர்கள்போலத் தன் ஆசையைக் கைவிட்டு விட்டானு? அதுதான் இல்லை. அண்டை வீட்டு ஆர். பி. சேதுப்பிள்ளையைத்தான் அவனுக்குத் தெரியுமே. அங்கே சென்று தனக்குச் சாரணர் படையில் சேர்வதற்கிருக்கும் ஆர்வத்தைக் கூறிச் சட்டைவேண்டுமென்று கேட்டிருக்கிருன். அடுத்த நாளே அவர் உதவியால் அவன் சாரணர் படையிலும் சேர்ந்துவிட்டான்.

இந்நிகழ்ச்சிகளையெல்லாம் வைத்து ரெங்கநாதனுக்குத் துறவு பூணும் உள்ளத்தை உண்டாக்கியவர் விபுலானந்த அடிகளே என்றும் அண்ணமலை நகரிலிருக்கும் காலத்திலேயே தொண்டு செய்ய வேண்டுமென்ற உள்ளம் அவனுக்கு ஏற்பட்டிருந்ததென்றும் ரெங்கநாதன் குடும்பத்தார் கருதுகிருர்கள். ஆனல், ரெங்கநாதனின் தமையன் கோபாலகிருஷ்ண பிள்ளையின் குடும்பச் சூழ்நிலைதான் அடிகளாரது துறவுக்குத் தூண்டுகோலாயிருந்திருக்கிறது என்பதே யாவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய உண்மை.

1931-முதல் 1936-வரை கோபாலகிருஷ்ண பிள்ளை அண்ணுமலை நகரில் வித்வான் வகுப்பில் சேர்ந்து பயின்ருர். 1937-ல் அவருக்கு இராமச்

சந்திரபுரத்தில் தமிழாசிரியர் வேலை கிடைத்தது. அவருடன்கூட ரெங்கநாதனும் இராமச்சந்திர புரம் சென்றான்.

கோபாலகிருஷ்ண பிள்ளை இராமச்சந்திரபுரத் தில் தமிழாசிரியர் வேலையை ஏற்றுக்கொண்டதும் திருமணம் செய்துகொண்டார். அவர் குடும்பத் தில் ரெங்கநாதன் தன்னால் இயன்ற பணிவிடைகளைச் செய்து கொண்டு, உயர்நிலைப் பள்ளி யில் எட்டாம்வகுப் பில் சேர்ந்து படித்துக் கொண்டி ருந்தான். அண்ண னுக்குத் திருமணம் ஆன மூன்றாண்டு



களுக்குள் 1940-ல் அண்ணனின் முதல் மனைவி இறந்துபோனாள். பிறகு அண்ணன் இரண்டா வது தாரம் செய்துகொண்டார். அந்த மனைவியும் சிறிது காலத்திற்குள் காலமானாள். அதன் பிறகு கோபாலகிருஷ்ணபிள்ளை மூன்றும் தாரம் செய்து கொண்டார். ஒருமுறை திருமணம் ஆவதென்றால் அதற்கான செலவும சிரமமும், பின்னர் மனைவி இறக்கும்போது ஏற்படும் துன்பமும், மீண்டும் திருமணப் பெண் தேடுவதில் உண்டாகும் அலைச்

சலும் எவ்வளவு என்பதை விளக்கத் தேவை யில்லை. இரண்டாவது உலகப்போர் நடந்த அந்தக்காலத்தில் ஆசிரியர் வேலை பார்த்துவந்த அண்ணன் கோபாலகிருஷ்ணபிள்ளைக்கு ஏற்பட்ட இன்ப துன்பங்கள் ரெங்கநாதன் மனத்தை மிகவும் மாற்றியிருக்க வேண்டும்.

ஆரம்பத்தில் கடியாபட்டியில் ரெங்கநாத ேைடு பழகிய நண்பர்கள் இன்று அவரிடம் ஏற் பட்டிருக்கும் மாற்றங்களைக்கண்டு வியக்கிருர்கள். பள்ளியிற் பயின்ற நாட்களில் அவர் திரைப் படம் பார்ப்பதில் மிகுந்த ஆர்வம் காட்டுவாராம். அண்ணுவுக்குத் தெரியாமலேயே இரவில் வெளி யூர் சென்று திரைப்படம் பார்த்துவிட்டுக் காலை யில் திரும்பி வந்துவிடுவாராம், அடுத்த வீட்டில் இரவில் பாடம் படித்ததாகப் பொய்யும் கூறுவா ராம். பரீட்சைக்கு அண்ணு குறித்து வைக்கும் விஞத்தாளை எடுத்து மாணவர்களுக்குப் பரோபகா ரம் செய்துவிட்டு உதையும் படுவாராம். சிறு வய திலேயே பொடி போடுவது சிகரெட் பிடிப்பது போன்ற கெட்ட பழக்கங்களும் அவரிடம் இருந் திருக்கின்றன.

மனிதன் முதலில் கள்ளைக் குடிக்கிருன். பின்பு 'கள்ளே கள்ளைக்குடித்து மனிதனையும் குடித்து விடுகிறது' என்பது ஒரு பழமொழி. கெட்ட பழக் கங்களை ஒரு முறை பழகிக்கொண்டுவிட்டால் அவற்றைப் பின்பு எளிதில் விட்டொழிக்க முடி யாது. ஆனல் ரங்கநாதன் எவ்வளவு விரைவில்

கெட்ட பழக்கங்களுக்கு அடிமையானரோ அதை விட அதிவிரைவில் அவற்றை அவர் விட்டொழித்திருக்கிருர். அடிகளார் இன்று காட்டும் மன உறுதிப்பாட்டை அன்றே பெற்றிருந்திருக்கிருர் என்பதற்கு இது தக்க சான்ருகும்.

ரெங்கநாதனுக்குப் படிப்பில் மிகுந்த ஆர்வமிருந்தும் சரிவரப் பயில வாய்ப்புக்கள் இல்லாதிருந்தன. குடும்பத்தில் அண்ணு கோபால கிருஷ்ண பிள்ளையுடன் சேர்ந்து சோருக்குதல் முதலிய எல்லா வேலைகளையும் அவர் பார்த்திருக்கிருர். இந்த நிலையில் 1942ல் ரெங்கநாதன் எஸ். எஸ். எல். சி. தேர்வு எழுதினர். பள்ளிக்கூட அலுவல்களைக் கவனிக்கமுடியாதவாறு வீட்டுத் தொல்லைகள் இருந்ததால் தேர்வைச் சரிவர எழுத முடியவில்லை. முதல் முயற்சியில் தோல்வியடைந்துவிட்டார். இளமையிலிருந்தே தமிழில் வல்லவராயிருந்த அடிகளுக்குக் கணக்குப் பாடம் எப்போதுமே ஏழாம் பொருத்தமாம். இப்போதுங் கூடத் திருமடத்துச் சிப்பந்திகள் அடிகளார்மீது இந்தக் குறையைத்தான் கூறுகின்ருர்கள் "சுவாமிக்குக் கணக்குப்போடத் தெரியவில்லை. வரும் வருமானமெல்லாம் புலவர்களைப் பாராட்டுவதற்கும் பிரச்சாரத்திற்கும் வெளியில் சுற்றுவதற்குமாகச் செலவழிகின்றது. வருவாய்க்கு மீறிய செலவாகவும் அது இருக்கிறது. அந்தக் கணக்குப்



போட அவர்களுக்குத் தெரியவில்லை. ஆனால் திரு மடத்திற்குள் நிருவாக அலுவல் ஒவ்வொன்றை யும் கவனித்து ஒருபடி அரிசிக்கு எவ்வளவு வெல் லம் என்றும், எவ்வளவு பருப்பு என்றும் அவர்கள் இம்மிக்கணக்குப் போடுகிறார்கள்'' என்பது அங் குள்ள சிப்பந்திகளின் குற்றச்சாட்டு.

எஸ். எஸ். எல். சி, தேர்வு முடிந்ததும் ரெங் கநாதன் தன் அண்ணனுக்குத் தாமும் உதவியாக இருக்கவேண்டுமென்னும் எண்ணத்தில் ஒரு வேலை தேட ஆரம்பித்தார். பட்டாளத்திற்குத் துரிதமாக ஆட்கள் சேர்க்கப்பட்ட காலம் அது. பட்டாளத்தில் சேர மனுச்செய்து கொண்டு திருச்சி சென்றார். அங்கு வயது போதாதென்ற காரணத்தால் அவருக்குத் தோல்வி ஏற்பட்டது. இடம் கிடைக்கும் என்று நம்பிச் சென்ற இடத் தில் ஏமாற்றம் ஏற்படவே வீடு திரும்பும்போது இரயில்வே டிக்கட் எடுக்கக்கூடப் பணம் இல்லா மல் இலவச யாத்திரை செய்து வீடு திரும்ப வேண்டி வந்ததாம். அதன்பின் டி. வி. எஸ். தொழிற்சாலையில் (Checking Inspector) வழிப் பரிசோதகர் வேலையொன்றுக்கு அவர் மனுச்செய் திருக்கிறார். அவ்வேலைக்கு முதல்படி 'கண்டக்டர்' உத்யோகம் பார்ப்பதுதான் என்று கூறப்பட்ட தால் அதற்கெனக் 'கண்டக்டர் சர்டிபிகேட்' முதலியனவும் எடுத்தார். . கரிமூட்டை தூக்கிப்போட வேண்டியதும் கண்டக்டரின்

வேலையென்று அங்கு அறிவிக்கப்பட்டபோது யாரிடமும் சொல்லிக்கொள்ளாமலேயே அவர் வீட்டிற்குக் கம்பி நீட்டிவிட்டார்.

பிறகு, இராமச்சந்திரபுரத்துக்கு அருகில் உள்ள இராயவரம் என்னும் இடத்தில் குடிசைத் தொழிலாகக் காகிதம் உற்பத்தி செய்யும் தொழிற்கூடமொன்றில் 1943-ல் சம்பளமில்லாத வேலையிலமர்ந்தார். நாலு மாதங்கள் அங்கு வேலை பார்த்தபின் ஊனியூர் என்னும் சிறு கிராமத்தில் ஆரம்பப்பள்ளி ஆசிரியரானார். அங்கும் போதிய வருவாயில்லாததால் ஒரு மாதங்கூட அங்கு இருக்கவில்லை. இவ்விதம் தோல்விகளுக்கிடையே மன நிறைவில்லாதிருக்கும்போது தமது பிறந்த ஊருக்கருகிலுள்ள தருமபுர ஆதீனத்தில் ஒரு கணக்கர் வேலை காலியிருப்பது அவருக்குத் தெரிந்தது. நடுத்திட்டு என்னும் தம் சிற்றூரில் சென்று விவசாய வேலைகளைக் கவனிக்க எண்ணிய அடிகளாரைத் தருமபுரத்திற்குச் செல்லும்படி வீட்டார் தூண்டினர். "அரைக்காசு உத்யோகமானாலும் அரண்மனை உத்யோகமல்லவா" என்று தந்தை அறிவுரை கூறினர். "வீட்டில் தண்டச்சோறு போட்டால் வேலைக்குப்போக மனம் வருமா" என்று வேறொருவர் விளக்கவுரை கொடுத்தார். இவ்விதம் வீட்டார் பலவிதத்தாலும் தூண்டியதால் ரெங்கநாதனும் அவ்வேலையைப் பார்ப்பதாக ஒப்புக்கொண்டு 1944 ஜூலையில் தருமபுரம் சென்றுவிட்டார்.

அங்கே சென்ற சிறிது காலத்திற்குள் அந்த ஆதீனத்தில் உள்ள அனைவரிடமும் அவர் நற்பெயர் பெற்றார். ரெங்கநாதனுடைய திறமையைக் கண்ட தருமபுர ஆதீனத் தலைவர் அவரை மிக விரைவில் தம்முடைய முக்கிய பணியாளர்களுள் ஒருவராக ஆக்கிக்கொண்டார். அதுமுதல் தருமபுரத் தலைவருடன் நம் ரெங்கநாதனுக்கு மிகுந்த தொடர்பு உண்டாக ஏதுவாயிற்று.

குடும்ப வாழ்க்கையில் அண்ணன் அடைந்த துன்பங்களைக்கண்டிருந்த ரெங்கநாதனுக்கு இளமையில் விபுலானந்த அடிகளிடம் தாம் கண்ட துறவுக் கோலத்தைத் தானும் தாங்கிச் சமயப்பணி புரிந்தாலென்ன என்ற எண்ணம் எழுந்தது. தருமபுர ஆதீனத் தலைவருக்கும் அவர்மீது சிறப்பான கண்ணோட்டம் விழவே, ரெங்கநாதன் 1945 ஆடி மாதம் 11-ந்தேதி கந்தசாமித் தம்பிரானாக மாறி விட்டார்.



# தம்பிரானுவது எப்படி?

தம்பிரான் என்ற பெயரையே அறியாதவர்கள் தமிழ் நாட்டில் பலர் இருக்கிருர்கள். மலையாள நாட்டிலோ தம்பிரான் என்ற சொல்லைத் தவழும் பிள்ளைகூடச் சொல்லும். ஆனுல் மலையாளத் தம்பிரான் வேறு; தமிழ்நாட்டுத் தம்பிரான் வேறு. மலையாளத்தில் தம்பிரான்களென்ருல் எசமானர்கள் என்று பொருள். தமிழ் நாட்டிலே தம்பிரான் என்ற சொல் காவியுடைச் சைவத் துறவியையே குறிக்கும். இந்தத் தம்பிரான்களை உற்பத்தி செய்யும் உரிமை ஒரு சில பண்டார சந்நிதிகளுக்குத்தான் உண்டு. அப்படி உண்டாக்கப்படும் தம்பிரான்களோ அவரவர் திருவிற்கு ஏற்ருற்போலப் பின்பு பண்டார சந்நிதிகளாவார்கள். பண்டாரசந்நிதி என்ற பதவியை அடைவது மிகவும் பெரிய பேருகக் கருதப்படக்கூடியவொன்ருகும். அந்த இடத்திலிருப்பவர் பெரியவராயினும், சிறியவராயினும் இடத்தின் பெருமையை நினைத்துப் புலவரிலிருந்து புரவலர் வரையிலும், செல்வர் முதல் சிப்பந்தி ஈருக அனைவருமே அவரைத் தாழ்ந்து விழுந்து வணங்குகின்றனர். தலைவணங்கி வாய் பொத்திக் கைகட்டி நிற்கின்றனர். இது திருமடங்களின் நடைமுறையாயிருக்கிறது.

பண்டாரசந்நிதிகள் என்பவர்கள் சமயசமூக வளர்ச்சிக்கென்றே தம் வாழ்க்கையை ஈடுபடுத்த உறுதிபூண வேண்டியவர்கள். அதற்காகவே அவர்கள் இல்லற வாழ்க்கையைத் துறக்கின்றார்கள். அவ்விதத் துறவுக்கோலத்தில் அவர்களுக்கு எல்லா நேரத்திலும் பணிவிடை செய்யவும், நிருவாக அலுவல்களில் உதவியாயிருந்து அவரது ஆணையைத் தலைமேற்றாங்கவும் ஆட்கள் வேண்டாமா? அதற்கெனத் தோற்றுவிக்கப்படுபவர்களே தம்பிரான்கள் என்போர் ஆவர்.



இந்தத் தம்பிரான்களைத் திருமடத்தின் பின் வாரிசு எனலாம். இவர்கள் மடத்துக்குச் சொந்தமான கோயில்கள் ஒவ்வொன்றிலும் தலைமை நிருவாகிகளாக நியமிக்கப் பெறுவார்கள். அப்போது அவர்கள் கட்டளைத்தம்பிரான்கள் என்று அழைக்கப்படுவர். தம்பிரான்களுக்கு மடத்திலிருந்து ஓரளவு வாழ்க்கைப்படியும், சாப்பாடும் கொடுக்கப்படும். சில சிறு அதிகாரங்களும் அவர்களுக்குண்டு. காவியுடுத்தியவர்கள் தம்பிரான்களாவதற்குமுன் 12-ஆண்டுகள் திருமடத்தில் பணிசெய்துகொண்டிருக்கவேண்டும் என்னும் நியதி இருக்கிறது. ஒருவர் உறுதிமொழியேற்றுக் காவியுடுத்தியதும் அவர் பரதேசி என்றே அழைக்கப்படுவார். பரதேசிக்குத் திருமடப்பள்ளியிலிருந்து பூசைஅறைவரை எல்லா

இடங்களிலும் முறையாகப் பணிசெய்யப் பயிற்சி அளிக்கப்படும். இந்தப் பரதேசி திருமடத்து அனுமதியோடு மூன்று ஆண்டுகள் நாடெங்கும் யாத்திரை சென்று வரவேண்டும். இவ்வித யாத்திரை 'காசி காணல், கன்னியாடல்' என்று கூறப்படும். இந்தச் சடங்கு முடிந்து திரும்பியதும் பரதேசி



குட்டி(த் தம்பிரானுகை) ஆவார். குட்டித் தம்பிரானுக்குச் சமயதீட்சை செய்துவைக்கப்பெறும். பின்னர் மூன்று ஆண்டுகழித்து அவருக்கு விசேடதீட்சை நடக்கும். பின்பு சில ஆண்டுகள் கழித்து மந்திர காஷாயம் வழங்குதல், உடையவர் பூசை கொடுத்தல், என்ற சடங்குகளெல்லாம் நடக்கும். அவை அனைத்தும் முடிந்ததும் அவர் தம்பிரான் என்னும் பட்டத்தை அடைவார். பண்டாரசந்நிதிக்கு அருகிலிருந்து பணிசெய்பவர் ஒடுக்கத் தம்பிரான் எனப்படுவார். இம்மாதிரியான சடங்குகள் அனைத்தும் நிறைவேறுவதற்காக ஒருவர் இவ்விதம் பல ஆண்டுகளைச் செலவிட வேண்டுமென்றால் இந்தக்காலத்தில் யாரும் காவியுடை உடுக்க முன்வர மாட்டார்கள். அப்படியே முன்வந்து காவியுடை உடுத்தியபோதிலும் தற்காலத்திய திருமடச்சூழ்நிலையில் மூன்று நான்கு ஆண்டுகள்கூட அவ்வுடையில் அவர்கள் இருக்கமாட்டார்கள். காவியுடை பெற்றால் வித்வான் படிப்பை இலவசமாகப் படிக்கலாம் என்ற எண்ணத்தில் திருமடங்

களுக்கு வந்து, பல சலுகைகள் பெற்றுப் படித்துப் பட்டம்பெற்றதும் வெளியேறிவிடுகிற பேர்வழிகள்கூட உண்டென்று சொல்லப்படுகிறது. திறமையான ஆட்கள் அருமையாகவே கிடைக்கும் காரணத்தால் ஒருவருக்குக் காவியுடை கொடுத்தவுடனேயே அவர் நல்லவராயிருந்தால் அவரைத் தம்பிரான் பதவிக்கு உயர்த்திவிடும் பழக்கம் தற்போதைய திருமடங்களில் உண்டு. "கடியாபட்டி ரெங்கநாதனும்" அவ்வாறே எடுத்த எடுப்பில் கந்தசாமித் தம்பிரானாக ஆக்கப்பட்டார்.

காசி காணல், கன்னியாடல் முதலிய சம்பிரதாயச் சடங்குகளெல்லாம் அவருக்கு மிகக் குறுகிய காலத்திலேயே நிகழ்த்துவிக்கப்பட்டன. முதன்முதல் கந்தசாமித் தம்பிரான் திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், மதுரை முதலிய தலங்களுக்கு யாத்திரை போய்வர அனுப்பப்பட்டார். துறவியாகக் காவியுடையுடுத்த புதிதில் எப்படிப்பட்ட உறுதியுள்ளமுடையவர்களுக்கும் சபல புத்தி தோன்றுவதுண்டு. உலக பாசம் என்பது அச்சமயத்தில் தலைதூக்கி நிற்கும். உலகில் இனி உற்றார் உறவினர் என்று யார் வீட்டிற்கும் போக முடியாதே என்ற நினைப்பு வரும். நடனம் நாடகம் திரைப்படம் களியாட்டு எதையும் காணமுடியாதே என்றும் தோன்றும். இவ்வித எண்ணங்களால் உடனே காவியுடையைக் களைந்தெறிந்து விடத் துணிபவர் பலர். இன்றேல், அந்த உடை

யைக் களையவும் துணிவில்லாமல் உடுக்கவும் மன மில்லாமல் 'இதில் அகப்பட்டுக்கொண்டோமே' என, பேரின்பத்தையே இழந்துவிட்டவர்போலச் சோர்பவர் மிகப் பலர். இளம் காவியுடைதாரியின் மனத் திண்மையைக் காணவே யாத்திரைக்கனுப் பும் பழக்கம் திருமடங்களில் ஏற்படுத்தப்பட் டிருக்க வேண்டுமென்று தெரிகிறது. கந்தசாமித் தம்பிரான் யாத்திரை செய்த காலத்தில் அவருக் கும் பல கசப்பான நிகழ்ச்சிகள் ஏற்பட்டன.

திருப்பரங்குன்றத்தில் அவர் ஆண்டவரை வழிபட்டுக்கொண்டு வெளியே வந்தார். நல்ல பசியாயிருந்தது. முருகன் சந்நிதியிலுள்ள ஒரு உணவு விடுதிக்குள் நுழைந்தார். பரதேசிக் கோலம் எடுப்பதற்கு முன்பு எல்லோருடனும் சம மாகச் சென்று உட்காருவதுபோல் இப்பொழுது அவரால் உட்கார முடியமுல்லை. "யாரடா பரதேசி வெளியே நில், வேண்டியதைத் தரச்சொல்கிறேன்" என்று தடுத்து நிறுத்திவிட்டார் விடுதிச் சொந் தக்காரர்.

திருச்செந்தூர் முருகப்பெருமான் சந்நிதியில் வழிபாடுசெய்து வெளியேவந்துகொண்டிருந்தார். 'தடிப்பயல்களெல்லாம் சாமியாராகி விடுகிறுன்கள் உழைத்துச் சாப்பிட்டால் என்னவாம்" என்று ஒருவர் சொற்பொழிவு தொடங்கிவிட்டார். இவ் வித அனுபவங்களெல்லாம் கந்தசாமித் தம்பிரா னின் மனஉறுதியைத் தளர்த்திவிடவில்லை. துறவி களின் பெருமையைத் துறவுக்கோலத்தில்

வாழ்ந்துதான் நிலைநாட்ட முயல வேண்டுமென்று அவர் எண்ணிக்கொண்டார், நினைத்த கொள்கையையும், எடுத்த கோலத்தையும் எக்காரணங் கொண்டும் மாற்ற அவர் எக்காலத்தும் நினைந்த தில்லை.

கந்தசாமித் தம்பிரானுக்குத் தீட்சை செய்வித்து அவரைத் தமிழுலகுக்கு அளித்த பெருமை தருமபுரம் திருக்கயிலாய பரம்பரையில் இன்று 25-வது பட்டமாக எழுந்தருளியிருக்கும் திருப் பெருந்திரு சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளையே சாரும். அவரிடத்தில் தீட்சை பெற்ற அடிகள் இன்று அளவற்ற பெருமையுடன் திகழ்ந்து வருவதால் அவர் திருக்கரம் மிகவும் விசேடமுடையதென்று கருதவும் கூறவும் தோன்றுகிறது. இந்த மகாசந்நிதானம் காலத்தில் தருமபுரத்தில் சைவம், தமிழ் ஆகிய இரண்டின் வளர்ச்சிக்கும், செய்யப்பட்டிருக்கிற தொண்டு எண்ணிலவாகும். இவர்கள், தமிழ்க் கல்லூரி, தேவாரபாடசாலைகள், சிவாகம பாட



சாலைகள் முதலியன நடத்தியும், புதிதாக நிறுவியும் வருகிறார்கள். இவர்களுடைய காலத்தில் நிலைபேறுடையதாக நிகழ்ந்துள்ள ஒரு தமிழ்த் தொண்டைப்பற்றி இங்கே குறிப்பிடாமலிருக்க முடியாது. திருக்குறளுக்குள்ள பழைய உரைகள் ஐந்தையும் சேர்த்துத் தொகுப்புரை, உரைவிளக்கம், குறிப்பு, மேற்கோள், ஒப்புவமைப் பகுதிகளுடன் ஒருசேரப் பலருக்கும் பயன்படும்படி "திருக்குறள் உரைவளம்" என்னும் பெயரில் அவர்கள் வெளியிட்டிருக்கின்றனர். பல ஆயிரக்கணக்கான பக்கங்களுடன் மூன்று பகுதியாக அது மிக அழகிய முறையில் பெரும் பொருட்செலவில் அச்சிடப்பட்டிருக்கிறது. இச்செயலொன்றே சுவாமிகளின் பெயரைத் தமிழுலகில் என்றும் நிலைநிறுத்தப் போதுமானதாகும். அவரைப் போலவே இன்னும் தமிழ்த்தொண்டும், சமூகப் பணியும் புரிந்து வரும் பெரியார்களில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரானும் ஒருவர் ஆவார். அவர்கள் தம்முடைய அருளாட்சிக் காலத்திற்குள், கல்வி வளர்ச்சி, திருமுறை வளர்ச்சி, சைவசித்தாந்த அறிவு வளர்ச்சி, வைத்திய வசதி, அன்னதானம், தண்ணீர்ப்பந்தல், பொதுத் தருமம் இவற்றிற்காக 27 லட்சம் ரூபாய்களுக்கு மேல் நன்கொடை வழங்கியுள்ளார்கள். காசிமுதல் கன்னியாகுமரிவரை அவருடைய அறச்செயல்கள் விளம்பரமின்றி நடந்து வருகின்றன.

அவர்களது அறச்செயல்களும் கொடைச் சிறப்பும் ஒருபுறமிருக்க, காசிவாசி சுவாமிகள் ஒழுக்கத்தாலும் குணச்சிறப்பாலும் வேறு ஒப்புயர் வற்றவர்களாய் விளங்குகிருர்கள். எந்நேரமும் சிவசிந்தனையும் தூய செயல்களுங்கொண்ட அவர்களுடைய தோற்றப்பொலிவே கண்டோரை அருளியல்வழிச் சேர்க்கும் தன்மையுடையதாயிருக்கிறது. சோதிடம் பொய்யென்றுல் கிரகணத்தைப்பார் என்று ஒருபழமொழி உண்டு. அதே போலத் துறவறம் போலிஎன்று ஐயுறுவோர் காசிவாசி சுவாமிகளைப் பார்க்கலாமென்றும், திருமடம் செய்யும் சேவை என்ன என்போர் திருப்பனந்தாளைநோக்கலாம் என்றுங்கூடச் சொல்லலாம்.

இந்த உண்மைகள் மக்கள் கண்ணில் படாததால் பண்டாரசந்நிதிகள் என்றுலே ஒரு வெறுப்பான நோக்குடன் பார்க்கும் நிலை தமிழகத்தில் நிலவி வருகிறது. நெஞ்சையே திறந்து காட்டிஞலும் வஞ்சம் என்றுதான் தென்ஞட்டு மக்கள் காவியுடைதாரிகளை மதிப்பிடுகிருர்கள். வடநாட்டிலோ காவியுடை உடுத்தியவர்களது உடையைப் பார்த்த அளவிலேயே அவர்களை அந்நாட்டவர் மேலான தெய்வம் என்று மதித்து வரவேற்கின்றனர். தென்ஞட்டில் காவியுடைதாரிகள் செய்யும் அறச்செயல்களுக்கும் பாராட்டுக் கிடைப்பதில்லை. தமிழ்ப் புலவர்களுக்குப்

பண்டைக் காலத்தில் மன்னர்கள் பலர் ஆதரவு தந்து தமிழை வளர்த்துவந்திருக்கிறார்கள். அவர்களுடைய ஆதரவு இல்லாதுபோன இடைக்காலத்தில் சைவ மடங்கள் தமிழைப் பெரிதும் போற்றிப் புலவர்களை ஆதரித்து வந்திருக்கின்றன. சைவத் துறவிகளிற் பலர் மிகப்பெரும் புலவர்களாய்த் திகழ்ந்திருக்கிறார்கள். தமிழ் இலக்கியத்தில் இடைக்காலத்தில் அவர்கள் சேர்த்துள்ள நூற் செல்வங்கள் அளப்பருஞ் சிறப்புடையனவாகும். பகுத்தறிவுக் கண்ணைக் குதிரைக்குக் கடிவாளமிட்டதுபோல் ஒரே எதிர்ப் பார்வையில் செலுத்தும் தமிழறிஞர்கள், பல நூற்றுண்டுகளாகச் சைவ மடங்கள் தமிழ் வளர்ச்சிக்குப் பல அரிய தொண்டுகளைச் செய்திருக்கின்றன என்பதை மறந்துவிடக் கூடாதென்பதற்காகத்தான் இவ்வளவும் கூறினேன்.

கந்தசாமித் தம்பிரான் இந்தப் பகுத்தறிவு வாதிகள் போக்கை இளமையிலிருந்தே சிறப்பாகக் கவனித்துவரத் தொடங்கினர். அவர் தருமையில் தங்கிய காலங்களில் 'திராவிட நாடு' 'விடுதலை' முதலிய பகுத்தறிவுப் பத்திரிகைகளை விடாமல் வாங்கிப் படிப்பாராம். அப்பத்திரிகைகள் கூறுவனவற்றின் உண்மை நிலையை ஆராய்ந்து மறுப்பும் எழுதுவாராம். திராவிடப் பெரியார்கள் திரித்துக்கூறும் செய்திகளில் மக்கள் மயங்கிவிடாமலிருக்க மக்களிடையே தொண்டு

செய்ய வேண்டுமென்ற ஆசை அவருக்கு அப்பொழுதிருந்தே தோன்றியிருக்கிறது.

கந்தசாமித் தம்பிரான் 1945-ல் தருமபுரத்திற்குச் சொந்தமான மாயூரம் குமரக் கட்டளையிலும், பின்னர் 1948-ல் திருக்கடையூர்க் கட்டளையிலும், அதன்பின் ஓர் ஆண்டு சீர்காழிக் கட்டளையிலும் நியமிக்கப்பட்டிருந்தார். இந்த ஆண்டுகளில் அவர் தமிழ் வித்வான் படிப்பில் மூன்று வகுப்புக்களைப் படித்து முடித்தார். அப்போதுதான் 1949-லீ அவருடைய இளமைக் கனவுகள் நனவாகும்படி அவரது வாழ்க்கையிலேயே ஒரு பெரிய மாறுதல் நிகழ்ந்தது.



# வெற்றிப்பாதை

இல்லற வாழ்விலுள்ளவர்களுக்குக் குழந்தை இல்லாத போது குழந்தை இல்லேயே என்னும் கவலே ஏற்படுவதுண்டு. குழந்தைப்பேற்றுக்காக அவர்கள் தலங்கள்தோறும் செல்வதுமுண்டு. எல்லாப் பற்றையும் துறந்தவர்களுக்குங்கூட இவ்விதம் ஒரு கவலே ஏற்படுவதும், அதற்காக அவர்கள் பல இடங்களிலும் அலேவதும் உண்டென்று கூறினல் அன்பர்களுக்கு அது வியப்பாயிருக்கும். துறவிகளுக்குக் குழந்தைகள்மீது விருப்பம்எதற்கு என்ற ஐயமும் எழும்.

தமக்குப்பின் தம் பெயர் சொல்ல இல்லறத்தார்க்கு எப்படி ஒரு வாரிசு தேவையோ அப்படியே துறவிகளுக்கும் தமக்குப்பின் தாமிருந்த அறநிலேயத்தைக் காக்க ஒரு வாரிசு தேவை. அந்த வாரிசைச் சைவத்துறவிகள் தம் திருமடத்திலோ பிற மடங்களிலோ காவியுடைதரித்து வாழும் தம்பிரான்களிலிருந்து தேர்நதெடுப்பார்கள். அந்த வாரிசுக்குத் தகுதியானவர்களைத் தேர்ந்தெடுப்பதன்பொருட்டுப் பண்டாரசந்நிதிகள் பல காலம் ஆருக் கவலேயடைவதுகூட

உண்டாம். இந்தவிதமான ஒரு கவலை குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீன 44-வது பட்டமாக எழுந்தருளியிருந்த திருப்பெருந்திரு ஆறுமுகதேசிக பரமாச்சார்ய சுவாமிகளுக்குப் பல காலம் இருந்துவந்தது. உயிரோடிருக்கும்போதே வாரிசு தேடி வைப்பதில் பல விபத்துக்களுண்டு. அதிகாரமும் அறநிலையச் சிப்பந்திகளின் அன்பும் வாரிசாகவரும் இளவரசின் பக்கம் திரும்பிவிட்டால், வாரிசு தேடி வைத்தவரின் நிலை நித்தியகண்டமாய் விடும்.. இதனால்



தான் பெருஞ் செல்வர்களும் பண்டார சந்நிதிகள்போன்று செல்வமும் செல்வாக்கும் படைத்தவர்களும் தங்கள் கடைசிக்காலம்வரை வாரிசு என்னும் பேச்சையே கிளப்புவதில்லை. ஆறுமுக தேசிக சுவாமிகள் பட்டத்திற்கு வந்தபோதே பழுத்த வயதடைந்திருந்தார்கள். திருவாகம் முதலியனவற்றைச் செவ்வனே நடத்த இளவல் ஒருவரை நியமிக்க வேண்டுமென்று அவர்கள் நெடு நாட்களாக எண்ணிவந்தார்கள். இந்நிலையில்

திருவண்ணுமலை ஆதீன மடத்தில் நடைபெறும் குரு பூசைக்கு நமது கந்தசாமித்தம்பிரான் ஒரு முறை தருமை ஆதீனத்தின் பிரதிநிதியாக வந்தார். அவரிடத்தில் காணப்பட்ட அருட்பொலிவும் அறிவுச்சுடர்விடும் கண்களும் மடத்திலுள்ள அனைவர் உள்ளத்தையும் முதற் சந்திப்பிலேயே கவர்ந்தன. யாவரிடத்திலும் அன்பொழுகப் பேசும் பண்பு கந்தசாமித்தம்பிரானுக்குண்டு. அவர் அனைவருடனும் அன்பாக நாவன்மை தோன்ற உரையாடியதுகண்டு சிப்பந்திகள் பலரும் தம்மை யுமறியாமல் அவரிடம் பற்றுள்ளம் காட்டினர். இவற்றை நேரில் கண்ட ஆறுமுக தேசிகருக்கும் கந்தசாமித்தம்பிரான்மீது நாட்டம ஏற்பட்டது. இவ்விதம் திருவண்ணுமலை ஆதீனத்தில் யாவருள் ளத்திலும் நீங்காதவொரு சிந்தனையைப் பதித்துச் சென்ற கந்தசாமித் தம்பிரான் அடுத்த ஆண்டி லும் குரு பூசை விழாவிற்குத் தருமை ஆதீனப் பிரதிநிதியாகக் குன்றக்குடிக்கு வந்தார். அப்போது அவருக்கு அக்குருபூசை விழாவில் சொற் பொழிவாற்ற ஒரு வாய்ப்பளிக்கப் பட்டது. அவருடைய சொற்பொழிவுத் திறனைப் பற்றி முன்னரே சிலர் ஆறுமுகதேசிகருக்குக் கூறியிருக் கிருர்கள். அவரது திறமைகளை நேரில் இரண் டாம் முறையும் சந்தித்துக் கண்ட ஆறுமுக தேசிகர் அவரையே தம் வாரிசாக அழைத்துக் கொள்ள முடிவுகட்டிவிட்டார். அந்த முடிவை நிறைவேற்றி வைக்க முயற்சி எடுத்துக்கொண்ட வர்களில் திருக்கடையூர்க் கைலாசம் பிள்ளை

குறிப்பிடத்தக்கவராவார். குன்றக்குடி திருவண்ணமலை ஆதீன மடத்துடன் அவருக்கு நெருங்கிய தொடர்பிருந்தது. கார்காத்தார் மரபினைச் சேர்ந்த அவர், தம் மரபிலேயே வந்த கந்தசாமித் தம்பிரானைத் திருவண்ணமலைஆதீன மடத்திற்குக் கொண்டுவந்து விடுவதில் மிகுந்த பற்றுக் காட்டினர். அதற்கென்று தருமபுரத்திற்குச் சென்று பேச்சும் நடத்தினர்.

திருமடத்தின் பெயரை வளர்ப்பவர்கள் தம்பிரான்கள். ஆகவே, அறிவும் ஆற்றலுமுடைய தம்பிரான்களைத் திருமடத்திலிருந்து வெளியில் அனுப்ப அனேகமாகப் பண்டாரசந்நிதிகள் இசைவதில்லை. கந்தசாமித் தம்பிரானைக் குன்றக்குடிக்கு அனுப்பத் தருமையாதீனத்தார் முதலில் விருப்பம் காட்டாததால் கைலாசம் பிள்ளை அவரை இரவோடு இரவாகக் குன்றக்குடிக்கு அழைத்துவர எண்ணினர். தம்பிரான்கள் ஒரு திருமடத்திலிருந்து மற்ருெரு மடத்திற்கு மாறிச் செல்வதென்பது இரண்டு காரணங்களால்தான் நிகழும். ஒன்று மனவேற்றுமை காரணமாக அது இருக்கும். அன்றி, அது முன்னேற்றங் கருதியதாக இருக்கும். இவற்றில் ஒருவர் எந்தக் காரணத்தால் மடம் விட்டு மடம் மாறினுலும் நேரில் சொல்லிக்கொண்டு மனம் ஒத்துப் பிரிந்து செல்வதென்பது பெரும்பான்மையும் திருமடங்களின் வரலாற்றில் கிடையாது. அதேபோல யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் தருமையாதீனத்தை

விட்டுக் குன்றக்குடிக்கு வந்துவிடக் கந்தசாமித் தம்பிரான் இணங்குவாரெனக் கைலாசம்பிள்ளை எண்ணினர். ஆனல் அஃது இயலவில்லை. நேரிய வழியில் செல்லவேண்டுமென்ற கந்தசாமித் தம்பிரானின் கருத்தையறிந்த கைலாசம் பிள்ளை மறுமுறையும் தருமையாதீனத் தலைவருடன் பேச்சுநடத்தி உரிய இசைவு பெற்றார்.

தருமபுரத்தில் தமது எண்ணிலாத் தோழர்களிடம் விடைபெற்றுக்கொண்டு கந்தசாமித் தம்பிரான் 5—9—49ல் குன்றக்குடிக்கு வந்துசேர்ந்தார். அவர் வருவதற்கு முன்பே உறுதிப்பத்திரம் **(will)** முதலியன எழுதப்பட்டன; வந்து சேர்ந்ததும் இளவரசுப் பட்டமும் கட்டப்பட்டது. திருமடத்து வழக்கப்படி அவருக்கு அருணசலதேசிக சுவாமிகள் என்னும் புதிய பெயரும் சூட்டப் பெற்றது.

அருணசல தேசிகருக்குக் குன்றக்குடியில் ஏராளமான கட்டுப்பாடுகள் இருந்தன. தருமையில் இருந்தகாலத்தில் அவர் சைவத்துக்கும் தமிழுக்கும் பலவிதத்தில்தொண்டு செய்ய வேண்டுமெனக் கனவு கண்டார். அவற்றிற்கெல்லாம் குன்றக்குடி இடங்கொடுக்குமோ என்ற ஐயம் ஏற்படும் நிலையிலேயே குன்றக்குடித் திருமடம் இருந்தது.

குன்றக்குடித் திருவண்ணமலை மடம் வருவாயில் மிகச் சிறியது. வெளியார்கள் அங்கு மிகுதியாக வரப்போகவுள்ள திருமடமாகவுங்கூட அது

அண்மைக்காலங்களில் நிகழ்ந்ததில்லை. ஊரும் மிகச் சிறியதாதலின் அங்கு அருணாசல தேசிகர் தொடங்கும் செயல்களில் ஒத்துழைக்கத் தக்கவர்கள் தொடக்கத்தில் அவருக்குக் கிடைக்கவில்லை.

அருணாசலதேசிகர், தாம் குன்றக்குடிக்கு வந்த முதல் ஆண்டிலேயே அங்கே திருவள்ளுவர் திருநாள், தமிழ்த்திருநாள் முதலியன நடைபெற ஏற்பாடுகள் செய்தார். அறநிலையச் சொத்துக்கள் சமயப்பணிக்கென்றே எழுப்பப்பெற்றன. அச்சொத்தைக் காக்கும் துறவிகள் அதைத் தமிழ்த் திருநாளும், திருவள்ளுவர் திருநாளும் கொண்டாடச் செலவிடலாமாவென ஓர் எதிர்ப்பு எழுந்தது. சிக்கன வாழ்வு வாழ்பவர் எனப் பெயர் பெற்ற ஆறுமுகதேசிகருக்கும் இளவலாய்த் திகழும் அருணாசல தேசிகருக்கும் இதனால் கருத்து வேறுபாடும் தோன்றியது. பெரியவர் சிறியவருக்குப் பணம் கிடைக்க வழியில்லாதபடி செய்துவிட்டார். இத்தனைக்கும் இடையிலுங்கூட அருணாசலதேசிக சுவாமிகள், திரு வி. க. பண்டிதமணி போன்ற பெரும் புலவர்களுக்குப் பாராட்டு நடத்தினர். திருக்குறள் திருமுறை வகுப்பு முதலியனவும் குன்றக்குடியில் நடைபெறச் செய்தார். இக்காலங்களில் அருணாசலதேசிகருக்கு வேண்டிய பொருள் கிடைப்பதற்கு ராம. கன்னையா, வீராசாமி என்ற இரண்டு அன்பர்கள் பலவகையாலும் உதவிபுரிந்தனர்.

செட்டி நாட்டில் அரசியல் உணர்ச்சியைத் தட்டி எழுப்பிய முன்னணித் தலைவர்களில்



காரைக்குடி திரு. சா. கணேசனும் ஒருவர். மேடைகளில் வீர முழக்கம் செய்து, எடுத்த செயலை விடாது சாதிக்கும் திறன் படைத்த அவரைத் தமிழுலகம் நன்கறியும். அவருடைய தொடர்பு அருணசல தேசிகருக்கு எதிர்பாராத விதமாக ஏற்பட்டது. சிறந்த தமிழன்பரும் சிவநேசச் செல்வருமான பலவான்குடி குமா. சுப. குமரப்ப செட்டியார் தேவகோட்டைத் தமிழ் வள்ளல் சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் ஆகியோரும் அடிகளாருடன் வந்து தொடர்பு கொள்ளத் தொடங்கினர். அது முதல் அருணசலதேசிகர் பெயர் எங்கும் தெரியத் தொடங்கியது.

1951-ல் ராஜா சர். முத்தையா செட்டியாரையும், சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரையும் அருணசல தேசிகர் திருமடத்திற்கு அழைத்துப் பொன்னுடை போர்த்திப் பாராட்டினர். சர். ஆர். கே. சண்முகம் செட்டியாரையும் திருமடத்தில் வரவேற்றுப் பொன்னுடை போர்த்தினர். தமிழ்ப் புலவர்கள் பலரைத் தமது ஆதீனப் புலவர்களாக்கி

அவர்களுக்கு ஆதரவு கொடுத்தார். திருவண்ணு மலை ஆதீன மடத்தில் புதிதாக இளவரசுப் பட்டமேற்றிருப்பவர் புரட்சிகரமான முறையில் தமிழ்த் தொண்டும் சமயத்தொண்டும் செய்கிருர் என்ற செய்தி செட்டிநாடெங்கும் விரைவில் பரவியது. ஒவ்வொரு ஊரிலிருந்தும் தமிழ் ஆர்வமும் சமய சிந்தனையுமுள்ள அன்பர்கள் குன்றக்குடிக்கு வரத்தலைப்பட்டார்கள்.

நாளடைவில் திருவண்ணுமலையாதீனம் பற்றிய பேச்சு செட்டி நாட்டுக்கு வெளியிலும் பரவத் தொடங்கியது. நாடெங்கும் விழாக்கள் நடக்கின்ற இடங்களிலெல்லாம் அருணுசலதேசிக சுவாமிகளை வாழ்த்துரை வழங்க அழைப்பது ஒரு வழக்கமாயிற்று. "குன்றக்குடியில் புதிதாக வந்திருப்பவர் மிக அழகாகப் பேசுகிருர்; எளிமையாகத் தோற்றமளிக்கிருர்" என்று மக்கள் பேசாத இடமில்லை. செல்லும் இடங்களிலெல்லாம் மக்களது உள்ளம் மகிழும்படியாகப் பேசும் அடிகள் கடைசியில் விடை பெற்று வரும்போது போய்வருகிறேன் என்ருே அடுத்த முறை பார்க்கிறேன் என்ருே சொல்லுவதில்லை. தம்மை அழைத்து அன்புசெய்தனுகுபவர்களைப் பார்த்து 'நீங்கள் ஒருமுறை குன்றக்குடிக்கு வாருங்கள்' என்று கூறித்தான் அவர் விடை பெற்றுக் கொள்வார். யார் எந்த நேரத்தில் அங்கே சென்ருலும் தடையின்றிச் சாப்பாடு நடை பெற்றது. குன்றக்குடியில்புதியபுதியவிழாக்களும் நடத்தப்பட்டன.

இவற்ருலும் குன்றக்குடியில் அன்பர்கள் கூட்டம் வர வர அதிகமாயிற்று. இதற்கிடையில் ஆறுமுகதேசிகருக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டது. அதன் காரணமாக அவர் 4—10—52ல் அருணுசலதேசிகருக்கே முழு அதிகாரங்கள் வழங்கித் திருக்கோளக்குடி என்ற தலத்தில் சென்று ஓய்வெடுத்துக்கொள்ளத் தொடங்கினர். அடிகளாரிடம் நிருவாகப் பொறுப்பு முழுவதும் வந்த பிறகும் அவர், சொற்பொழிவுகளுக்குச் செல்லுதல், விழாக்கள் நடத்துதல் முதலிய தம் வேலைத்திட்டங்களுள் எதையும் குறைத்துக்கொள்ளவில்லை.

குன்றக்குடியில் சைவசித்தாந்தசமாசத்தாரை அழைத்து அருணுசலதேசிகர் ஆண்டுவிழா நடத்தச் செய்தார். அடிக்கடி பல பேரறிஞர்களைக் கூட்டிச் சமயச் சொற்பொழிவுகள் நிகழச்செய்தும் சமய வளர்ச்சிபற்றி ஆலோசனைகள் நடத்தியும் வந்தார். நாத்திகப் பிரச்சாரங்களுக்கு அவ்வப்போது மறுப்புக்கள் எழுதினர். அவற்றைப் புத்தகங்களாகவும் வெளியிட்டார். இவ்விதம் சமயத்தொண்டுசெய்துவந்த அடிகளாரின் பெயர் தமிழகமெங்கும் பரவுவதற்கும், நிலையான சமயத்தொண்டர்கூட்டம் ஒன்று தமிழ்நாட்டில் உருவாவதற்கும் ஒரு பகுத்தறிவுப் பெரியார் உதவிபுரிந்தார். அந்தப் பெரியார் செய்த உதவியால்தான் அருள்நெறித் திருக்கூட்டம் தமிழகத்தில் உருவாயிற்று என்பதை அவர் தற்போது அறிவாரோ என்னவோ?

———

# வளரும் திருத்தொண்டு

---

திடீர் திடீரென மனம்போனபடி ஏதாவதொரு அறிவிப்பை வெளியிட்டுச் சமுதாயத்தில் ஒரு பரபரப்பை உண்டாக்க முயல்வதில் ஈ. வே. ரா. பெரியார் ஈடு இணையற்றவர். இருந்தாற்போ லிருந்து ஏதாவது ஒரு கிளர்ச்சி செய்யப் போவ தாக அவர் அறிவிப்பார். உடனே அவருடைய ஆதரவாளர்களெல்லாம் அதை நாட்டில் பெரிது படுத்துவார்கள். எதிர்ப்பாளர்களாக இருப்பவர் கள் கேலி செய்வார்கள். சிறிது நாளில் எல்லாம் ஒடுங்கிப்போகும் பிறகு மறுபடியும் ஏ தா வ து ஓர் அறிவிப்பை அவர் திடீரென்று வெளியிடுவார். இவ்விதம் அவர் தொடங்கும் திடீர்க் கிளர்ச்சியில் (Political Stunt) அடையும் பலன் உருப்படியாக ஒன்றும் இராது. பத்திரிகையில் சில கா ல ம் பெயர் அடிபடும். அவ்வளவுதான். ஆனால் அவர் இதுபோல 1952 ஆகஸ்டில் கிளப்பிய கிளர்ச்சி யானது அப்படியொன்றும் வீ ணா கி வி ட வில்லை. 2—8--1952ல் பிள்ளையார்உடைப்பு இயக்கத்தை நடத்தப் போவதாக ஈ. வே. ரா. பெரியார் அறி வித்தார். அந்த அறிவிப்பு வந்ததும் ஆத்திக அன்பர்கள் பலர் பிள்ளையார் கோவில்களைப்

புதுப்பிப்பதிலும் வழிபாடுகள் நடத்துவதிலும் முனைந்து கச்சை கட்டினார்கள். சமயத்தொண்டு செய்வதற்குத் தமிழகமெங்கணும் ஆதரவுபெற்ற நிலையான நிறுவனமொன்றை ஏற்படுத்த வேண்டு மென்றெண்ணிக் காலம் பார்த்திருந்த அருணாசல தேசிகருக்கு இஃது ஒரு நல்ல வாய்ப்பாயிற்று. 11—8—52ல் பல பெருமக்களைக் குன்றக்குடிக்கு அழைத்துச் சமயமாநாடு ஒன்றை அவர் நடத்தினார். அன்றே அருள் நெறித் திருக்கூட்டமும் தொடங்கப்பெற்றது. திருக்கூட்டத் தொடக்கநாளில் தமிழகத்தில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க பெரியார் பலர் குன்றக்குடிக்கு வந்திருந்தனர். அந்த ஆரம்ப ஒத்துழைப்பு அருள்நெறித் திருக்கூட்டம் தமிழகத்தில் விரைவில் வேரூன்றுமென்பதற்கு அறிகுறிபோல் இருந்தது.




அருள்நெறித் திருக்கூட்டம் இன்று தமிழகத்தின் பல பகுதிகளிலும் நன்கு வேர்விட்டுக் கிளைத்திருக்கிறது. அருட் செல்வர்களும் பொருட்செல்வர்கள் பலரும் ஆங்காங்கு அத்திருக்கூட்டத் தலைவர்களாகவும் செயலாளர்களாகவும் இருந்து வருகிறார்கள். மதுரை திருநெல்வேலி இராமனாதபுரம் கோவை ஆகிய மாவட்டங்களில் அது மிகவும் செல்வாக்குடைய நிறுவனமாகத் திகழ்கிறது. மதுரை அருள்நெறித் திருக்கூட்டத்திற்கு சைவப் பற்றும்தமிழார்வமுமுடைய திரு. தி. மாணிக்கவாச

கம் செட்டியார் B. A., தலைவராகத் திகழ்கிறார். இவர் கலைத்தந்தை எனப் புகழப்பெற்ற பெருமகனாரும் தமிழ், தமிழினம், தமிழ்ப்பண்பாடு ஆகியவற்றின் பண்டைய மேன்மையை நன்குணர்ந்து தமிழின் வாழ்வே தம் வாழ்வெனச் சிந்தித் தொழுகிவருபவருமான திரு. கருமுத்து தியாகராசச் செட்டியாரின் வழித்தோன்றல் ஆவார். நல்ல



மாணிக்கவாசகம் B. A.,

தமிழில் செய்தி தந்து பத்திரிகை யுலகிலேயே புதுமை கண்ட 'தமிழ் நாடு' நாளிதழின் ஆசிரியராகவும் இவர் இருக்கிறார். இவரால் மதுரை அருள்நெறித் திருக்கூட்டம் தகுதி நிறைந்த ஒரு கிளை நிறுவனமாக இயங்கி வருகிறது. அதேபோல நெல்லை மாவட்டத்திலும் அருள் நெறித்திருக்கூட்டம் மூலைமுடுக்கெங்கும் சிறந்த முறையில் செயலாற்றி வருகிறது இதற்குக் காரணம், நெல்லை மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டத்திற்கு இலஞ்சிப் பெருநிலக்கிழாரும், காலஞ்சென்ற பெரியார் ராவ் பகதூர் ஐ. சி. ஈஸ்வரம் பிள்ளை மருமகனாருமான திரு. ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை என்பவர் தலைவராயிருப்பதுதான். 44 வயதுகளைக் கடந்துவிட்ட அப்பெரியார், 20 வயது இளைஞர்

போல ஆர்வத்தோடு ஊர் ஊராகச் சென்று எங்கும் அருள்நெறித் திருக்கூட்டக் கிளைகளை ஏற்படுத்தி வருவது பார்ப்பவர்களை வியப்பிலாழ்த்துவதாயிருக்கிறது. அவருடைய சிறந்த உழைப்பால் திருநெல்வேலி மாவட்டத் திருக்கூட்டம் எல்லா வகையிலும் முன்னணியில் நிற்கிறது. இராமநாதபுரம் மாவட்டத்திற்கும் நல்லதொரு தலைவர்



ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை எம். ஏ.,

வாய்த்திருக்கிறார். செட்டிநாடு செல்வர்களுக்கும் வள்ளல்களுக்கும் குறைவில்லாத நாடு. செல்வர்கள் குறைந்து போனாலும் செட்டிநாட்டில் வள்ளல்கள் குறைந்துபோகமாட்டார்கள் என்பதை மெய்ப்பிப்பதுபோல் வள்ளற்றன்மை மிக்க சிலர் இன்னும் அந்நாட்டில் இருந்து வருகிறார்கள். அவர்களிலொருவர் கோட்டையூர் திரு. கே. வி. ஏ. எல். ஆர். எம். இராமநாதன் செட்டியார் என்பவர். டாக்டர் அழகப்ப செட்டியார் கல்லூரியினை முன்னின்று நடத்திவரும் அவர் இராமநாதபுரம் வட பகுதி அருள்நெறித் திருக்கூட்டத்தின் தலைவராயிருக்கிறார் அவரைப்போன்றவர்களெல்லாம்

அருள்நெறித் திருக்கூட்டத்திலிருப்பதாலேயே அஃது ஒரு நல்ல எதிர்காலமுள்ள திருக்கூட்டமாகத் திகழ்ந்து வருகிறது. அருள்நெறித் திருக்கூட்டச் செயலாளர்களாக இருக்கும் திரு. சா. கணேசனும், ஈரோடு மீனுட்சிசுந்தர முதலியாரும் இரண்டு தீவிரப் பேச்சாளர்கள். ஈரோடு நகரசபைத் தலைவராக இருக்கும் மீனுட்சிசுந்தர முதலியார் பேசத் தொடங்கினல் விஞ்ஞானிகளெல்லாம் பின்னேக்கி ஓடவேண்டும். ஒவ்வொரு விஞ்ஞான உண்மையையும் அவர் சமயக் கோட்பாடு கொண்டு விளக்குவார். வீரமும் நகைச்சுவையும் பொருந்த நாத்திகர்களை அவர் தாக்கும் முறை மிக நயம் பொருந்தியதாக இருக்கும். "ஈ. வெ. ரா. ஈரோட்டுக்கு வந்த மூத்தாள். நான் அவளுக்கு நேர் இளையவள்" என்று உட்பொருளடக்கிய உவமைகளைக் கூறுவார். கதைகள் சொல்லி இளைஞர்களுக்கு உணர்ச்சி ஊட்டுவார். பொதுமக்களைக் கவரத்தக்க பேச்சுத் திறம் படைத்த அவர் கோவை, ஈரோடு ஆகிய வட்டாரங்களில் அருள்நெறித் திருக்கூட்டம் பரவப் பெருந் துணையாக இருந்து வருகிறுர். திரு. சா. கணேசனும் அடிக்கடி திருவண்ணமலை ஆதீன மடத்திற்கு வந்து அடிகளாருக்கு ஆலோசனைகள் வழங்கி வருவதோடு திருக்கூட்ட வளர்ச்சிக்கான செயல்களில் நேரடியாகக் கருத்துச் செலுத்தி வருகிறுர்.

ஒரு கழகமோ, திருக்கூட்டமோ திறம்படச் செயலாற்றுவது அதனுடைய செயலாளர்களைப் பொறுத்ததாகமட்டும் இல்லை. செயல் திட்டங்களுக்குக் கிடைக்கும் பொருள் வசதியைப் பொறுத்தும் அஃது இருக்கிறது. அடிகளாரின் ஆதரவை மட்டும் நம்பித் தொடங்கப் பெற்ற அருள்நெறித் திருக்கூட்டத்திற்கு ஒரு நல்ல பொருள்காப்பாளர் வாய்த்தார். அருள் நெறித் திருக்கூட்டத்தின் பெயரால் அந்தப் பொருள்காப்பாளரிடம் ஏதேனும் தொகை கொடுத்து வைக்கப்பட்டிருக்கிறதா என்று உறுதியாக ஒன்றும் கூற முடியாது. ஆனாலும், எந்த நேரம் திருக்கூட்டச் செலவுக்கெனப் பணம் வேண்டினும் அந்தப் பொருள்காப்பாளரிடம் பணம் கேட்கலாம். அப்படிப்பட்ட ஒரு மாபெரும் அருள்நெறியன்பராயிருப்பதறிந்தே அடிகளார் தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்பச் செட்டியார் அவர்களை மாநில அருள்நெறித் திருக்கூட்டப் பொருள்காப்பாளராக நியமித்தார். திரு. செட்டியாரவர்கள் தலைமுறை தலைமுறையாகச் சைவம் வளர்த்து வரும் செல்வக் குடும்பத்தில் தோன்றியவர்கள். அன்பு நிறைந்த உள்ளமும் ஆழ்ந்த கல்வியறிவும் உடையவர்கள். கற்றோரிடத்து மிகக் கனிவோடு பழகும் பண்புடைய செம்மல். சைவப் பற்றோடு நிறைந்த தமிழ்ப் பற்றும் தமிழிலக்கியப் பயிற்சியும் அவர்களுக்குண்டு. திருவையாறு, இலம்பை

யங்கோட்டூர், திருவேடகம், முதலிய இடங்களில் உள்ள பழைமை வாய்ந்த சிவாலயங்களைப் புதுப்பித்துத் திருப்பணி செய்த பெருமை இவர்கள் குடும்பத்தைச் சாரும். எல்லாவற்றினும் மேலாக திரு. செட்டியாரவர்கள் நாள்தோறும் முறைப்படி செய்து வரும் சிவபூசை யாவரும் கண்டு மகிழத் தக்க சிறப்புடையது. இச் சைவப் பெருமகனர் தொடர்பினல் செட்டிநாட்டின் உட்பகுதிகளில் அடிகளாருக்குப் பெருமதிப்பு வந்தது என்று கூறினல் அதை யாரும் மறுக்க முடியாது. 1951-ல் அடிகளார் திரு. மெய்யப்பச் செட்டியாருக்குச் சைவ சித்தாந்தப்புரவலர் என்னும் பட்டத்தினைத் தம் ஆதீனத்தில் அளித்துச் சிறப்பித்தார். அவருக்குப் பாராட்டு நடந்த அதே நாளில் பண்டிதமணி அவர்களுக்கும் திருவண்ணுமலை ஆதீனத்தில் பாராட்டு நடைபெற்றது. பண்டிதமணிக்கு அன்று சைவ சித்தாந்தப் புலவர் என்னும் பட்டம் வழங்கப் பெற்றது. ஒரே மேடையில் புலவரையும் புரவலரையும் வைத்துச் சிறப்புச்செய்த காட்சி தமிழுலகு மறக்க முடியாத ஒரு காட்சியாயிருந்தது.

அருள்நெறித் திருக்கூட்டத்திற்கு வேண்டும் போது பொருளுதவியும் பிற உதவிகளும் செய்து வருபவர்களுள் இராங்கியம் திரு. நா. வ. லெ.

இலட்சுமணன் செட்டியாரும் ஒருவராவார். அருள்நெறிப் பணியில் மிகுந்த நம்பிக்கைகொண்ட அவர் குடும்பத்தார் அடிகளாரிடத்து நல்லன்பு காட்டி அடிக்கடி திருமடத்திற்கு வந்து போவதை நான் பலமுறை கண்டிருக்கிறேன். சொற்பொழிவுக் கூட்டங்கட்குப் பயன்படும்படியாக ஓர் ஒலிபெருக்கிக் கருவியை திரு. லட்சுமணஞ் செட்டியார் குடும்பத்தார் அருள்நெறித் திருக்கூட்டத்திற்கு வாங்கிக் கொடுத்துள்ள்ார்கள்.



நா. வ. லெட்சுமணன் செட்டியார்

அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் புத்தக வெளியீடுகள் பல வெளிவந்திருக்கின்றன. நாடெங்கும் சமய வளர்ச்சிக் கூட்டங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. உழவாரப் பணி. சேரித் தொண்டு முதலியனவும் திருக்கூட்டத்தின் சார்பில் நடக்கின்றன. சமூகநல வேலைகளும் இத் திருக்கூட்ட அன்பர்களால் சில சமயங்களில் மேற் கொளளப்படுகின்றன.

அருள்நெறித் திருகூட்டத்தினர் தொடங்கி நடத்தி வருகின்ற விழாக்களில் திருவாசக விழா

மிகச் சிறப்புடையதாகும். அடிகளாருக்குத் திருவாசகத்தில் மிகுந்த ஈடுபாடுண்டு. இளம் வயது


திருவாதவூரில் திருவாசகவிழா 1953.

முதலே அவர் நாள் தோறும் திருவாசக பாராயணம் செய்து விழிநீர் பெருக்கி விம்மி விம்மி அகங் குழைந்து ஆனந்த வெள்ளத்தழுந்து வாராம். தெவிட் டாத இன்பம் நல்கும் திருவாசகத் தேனே அனைவரும் அறிந்து பருகி உய்ய வேண்டுமென்பது அடிகளாரின் ஆசை. ஆகவே அவர் ஊர்கள் தோறும் திருவாசக விழா எடுக்கும் திட்டத்தை வகுத்தார். ஒவ்வொரு ஆண்டும் மார்கழி மாதத்தில் திருவாதவூர்த் தலத்துக்குச் சென்று முதன் முதலில் திருவாசக விழாவை அங்கு தொடங்கி வைக்கும் பணியைத் தமது கடமைகளில் ஒன்ருகவும் அவர் ஏற்படுத்திக்கொண்டார். திருவாதவூரில் சிறிய அளவில் தொடங்கப்பட்ட திருவாசக விழா நாளுக்கு நாள் மிகச் சிறப்படைந்து வருகிறது. பல பெரு மக்கள் அத்தலத்திற்கு வந்து அதைக் காணும் ஒரு நிலையை இன்று அவ்விழா உண்டாக்கியிருக்

கிறது. 1953-ம் ஆண்டில் அங்கு நடந்த திருவா சகவிழா தனிச் சிறப்புடன் விளங்கியது இதற்குச் சான்று பகர்வது போலிருந்தது. செல்வக் குடியிற் பிறந்து சைவத் திருவில் தழைத்து வாழும் திரு. கருமுத்து தி. சுந்தரம் செட்டியார் B. Com. அவர் கள் அந்த விழாவைத் தொடங்கிவைத்தார்கள். சமண் கொடுமைக்களையகற்றத் தமிழ் மதுரையில் சைவமடம் நிறுவிய திருஞானசம்பந்தராதீன இளவரசு திருப்பெருந்திரு. சோமசுந்தர பரமாச் சார்ய சுவாமிகள் தலைமை தாங்கினர்கள். குன்றக் குடி அடிகளாரே விழாவுக்கு ஆசியுரை நல்கினர் கள். இவ்விதம் சிறப்புப் பெற்ற அவ்விழாவினைக் காண நாளிதழ் ஆசிரியர்களும், தமிழ்ப்பெரும் புலவர்களும், புரவலர்களும் அன்று அங்கு பெருந் திரளாக வந்திருந்தார்கள். மாபெரும் தலமாகிய திருவாதவூர் இவ்விதம் பலர் கண்ணிலும், கருத்தி லும் படும்படியாக ஒரு வாய்ப்பை உண்டாக்கி வரும் செயலுக்கு அடிகளாரைச் சைவ உலகும் வாழ்த்தக் கடமைப்பட்டிருக்கிறது.

தேவாரம், திருவாசகம் அருளிய சமய குரவர் கள் பிறந்த தலங்களைச் சைவ சமயிகள் போற்றுது புறக்கணித்து வருகின்றனர் என்னும் குறை இன் னும் தமிழகத்திலிருந்து வருகிறது. அடிகள் பிற ருக்குத் திருவாசகத்தின் பெருமையைப் பேசிய தோடு நில்லாமல் அதையருளிய மாணிக்கவாசகப் பெருந்தகையாரின் திருஅவதாரத் தலமாகிய திரு வாதவூரில் பழுதுபட்டுக் கிடக்கும் கோயிலுக்கு

மின்சார விளக்குப் போடவும் ஏற்பாடு செய்து அக்குறையை ஓரளவு நீக்கினார்கள். இத்தொண்டு நிகழ்வதற்கு அடிகளாருடன பெரு முயற்சி எடுத்துக்கொண்டு செயலாற்றிய திருவாதவூர்க் கோவில் ஓதுவாமூர்த்தி திரு யாழ்கீத சுந்தரம் பிள்ளையை நாம் இங்கு நினைவுகூர வேண்டும்.

அடிகளார் தொடங்கிய விழாக்களில் சிறப்புடையது திருவாசக விழா என்று முன்பு கூறினேன். அவர் நடத்தும் மற்றொரு விழாவும் அவருடைய தமிழ்ப் பற்றையும் மனப் பண்பாட்டையும் உணர்த்தச் சிறந்து நிற்கிறது. பாரி, வரையாது வழங்குபவனென்று பெயர் பெற்ற தமிழ் வள்ளல். அவனால் ஆதரிக்கப்பட்ட தமிழ்ப் புலவர்கள் பலர். அவன் காலத்தில் தமிழிலக்கியம் சிறந்தது. தமிழகம் பிறர் சுட்டும் நிலை பெற்றது. அப்பெருமதிப்பிற்குரிய வள்ளலுக்கு விழா எடுத்து அதனை அவனது ஆட்சி சிறந்த பறம்பு மலையின் தலைநகரின்கண்ணே ஆண்டு தோறும் நடத்தி வருகிறார் அடிகளார். ஒவ்வொரு ஆண்டும் ஒரு புலவர் அவ்விழாவில் சிறப்பிக்கப்படுவது இவ்விழாவின் சிறப்பியல்பு. 1953ம் ஆண்டில் நடந்த முதல் பாரிவிழாவில் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் சிறப்பிக்கப்பட்டார்கள். அவர்கள் மாநில அருள்நெறித் திருக்கூட்டப் பிரசாரக்குழுவின் தலைவராக இருந்து பணியாற்றுகிறார்கள். அடிகளார் அப்புலவர் பெருந்தகையிடத்து அளவற்ற அன்பு வைத்துள்ளார்கள்.



தெ. பொ. மீ.

அருள்நெறி திருக்கூட்டக் குழுவிற்குக் கிடைத்துள்ள அருமையான இலக்கியப்பேச்சாளர்


அ. ச. ஞானசம்பந்தன்

களில் சென்னை, பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தன் குறிப்பிடத்தக்கவராவார். அவர் திருவண்ணாமலை மடத்தில் எந்த நிகழ்ச்சி நடந்தாலும் முதலில் விரைந்து வந்து எல்லாச் செயல்களிலும் ஈடுபட்டுப் பணியாற்றுவது யாவருக்கும் வியப்பாயிருக்கும் அடிகளாரோடு மிக நெருங்கிய உறவு காட்டிப் பழகுபவர்களில் அவரும் ஒருவர்.

அடிகளார் பட்டத்துக்கு வந்ததும் தமது மேற்பார்வையிலுள்ள கோயில்கள் பலவற்றில் திருப்பணி மராமத்துச் செய்து கும்பாபிடேகம் செய்வித்தார்கள். தமது ஆதிக்கத்துக்குட்பட்ட பழம்பெருந் தலமான பிரான்மலைக் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களை ஆராய்ந்து வரலாறு எழுதக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்களை நியமித்து வேலை தொடங்கச் செய்தார்கள். "ஞாலம் நின்புகழே மிக வேண்டும்" என்பது ஞானசம்பந்தப் பெருமான் வாக்கு. அவ்வாக்கின் மேன்மையுணர்ந்து அடிகளார் அத்திருப்பாடற் கல்வெட்டை 30-8-52ல் ஆல்வாய்க் கோவிலில் நிறுவச் செய்தார்கள்.

தேவார திருவாசகங்களில் அடிகளாருக்கு எவ்வளவு பற்று உண்டோ அவ்வளவு பற்று சங்க

இலக்கியங்களிலும் அவருக்கு உண்டு. திருவாசகத்தைத் தினைத்துப் பயின்றது போலவே அவர்கள் திருக்குறளையும், பிற சங்க இலக்கியங்களையும் கசடறக் கற்றிருக்கிறார்கள். மதுரைப் பதியில் திருவள்ளுவர் பெயரால் மண்டபம் அமைக்க அவர்கள் 1001 ரூபாய் மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார்க்கு நன்கொடையாக வழங்கினார்கள். கோவை நகரக் கல்லூரிகளில் அவர்கள் திருக்குறட் போட்டி நடத்திப் பரிசளிக்கவும் பொருளுதவி செய்தார்கள். ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்திற்கு 501 ரூபாய் வழங்கினார்கள் இவை அவர் சைவத்துக்கேயன்றித் தமிழுக்கும் சேவை செய்யக் கொண்ட பேருள்ளத்தை வெளிப்படுத்தும்.

தமிழ்ப் புலவர்கள்பால் அடிகளார் வைத்த அன்பும், மதிப்பும் அளப்பரியதாகும். திரு. வி. க., பண்டிதமணி, கவிமணி, தொ. பொ. மீ., ஆர். பி. சேதுப்பிள்ளை ஆகிய அனைவருக்கும் அவர்கள் பாராட்டு நடத்திவிட்டார்கள். திரு. வி. க. பேரால் மகளிர் புண்ணிய விடுதியொன்றை நிறுவி, ஏழை அநாதைக் குழந்தைகளை வளர்த்துக் கல்வியும் புகட்டி வருகிறார்கள். மாணிக்கவாசகர் பெயரால் ஒரு மாணவர் இல்லமும் குன்றக்குடியில் நிறுவப்பட்டுள்ளது. அவ்வில்லத்தில் அநாதையான மாணவர்களுக்கு உணவு, உடை, கல்வி முதலியன வழங்கப்பட்டு வருகின்றன.

அரிசனச் சேரித் தொண்டில் அடிகளார் மிகுதியாக ஈடுபடுகின்றார்கள். நில நன்கொடை இயக்கத்தில் தமக்குள்ள நம்பிக்கையைத் தெரிவித்து அவர்கள் கால் நடையாக நன்கொடைபெறச் சென்றார்கள். குளம், கிணறு தோண்டுதல், சாலை போடுதல், கால்வாய் வெட்டுதல் என்று அவர் சென்று கலந்துகொள்

ளாத சமூகநல வேலைகளே இல்லை என்னலாம். மதுரை இம்மையில் நன்மைதருவார் கோயில் திருக்குளத்தில் சகதியள்ளிப் பல நூற்றுக்கணக்கான மக்களையும் அதில் பங்கெடுக்கச் செய்தது 1953ல் மதுரையில் பெரும் புரட்சிகரமான செய்தியாயிருந்தது. இந்தியாவில் மட்டுமின்றி இலங்கைக்கும் 31-5-53ல் அடிகளார் சென்று இரண்டு வாரங்கட்கு மேல் அங்குள்ள இந்தியர்களுக்குச் சொன்மழை பொழிந்து ஒரு ஒப்பற்ற எழுச்சியை உண்டாக்கி வந்தார்கள். இலங்கையில் அடிகளாருக்குச் செய்யப்பட்ட மாபெரும் வரவேற்பை ஒரு தனி நூலாகவே எழுதினுல்தான் அது அமையும். அருள்நெறிப் பணி மலேயாவிலும் நடைபெறச் சகோடாயாழ்மணி பி. ஓ. கே. நடராசபிள்ளை என்பவரை அடிகளார் நியமித்தார்கள். சகோடயாழ்மணி கோலாலம்பூர், கிள்ளான், மலாக்கா, ஜோகூர், மூவார், சிரம்பான் முதலிய பல இடங்களில் அடிக்கடி அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்திருக்கிருர். இப்படி அடிகளார் செய்துவரும் செயல்களை ஒவ்வொன்ருகக் கூறிக்கொணடே போனுல் மிக விரியும். ஆகவே, அவர் செய்யாது விட்ட சில செயல்களை மட்டிலும் இங்கே தருகிறேன்.

**அடிகளார் செய்யாது விட்டவை:-**

உரிய காலத்தில் உணவுண்ணல், உறங்குதல். கூட்டங்களுக்கு அழைத்தால்வர மறுத்தல் (அண்மையில் சிப்பந்திகளே மறுத்து விடுவதாகக் கேள்வி) திருமடங்களின் சம்பிரதாயப்படி கூட்டங்களில் எப்போதும் உட்கார்ந்துகொண்டு பேசுதல். பணத்தைச் சிக்கனமாகச் சேர்த்து வைத்தல். பண்டார சந்நிதிகளுக்குரிய சின்னங்களையும், ஆபரணங்களையும் மிகுதியாக அணிதல், தன்

னுடைய பெயரையும் புகழையும் எண்ணிப் பிறரை எளிதாக மதித்தல். நீண்டதூரம் இரவிலும் பகலிலும் ஓய்வின்றிப் பிரயாணம் செய்ய அஞ்சுதல். கருத்து வேறுபாடுஉடையவர்களை நேரில் வாதுக்கு அழைக்கப் பின்வாங்குதல். சைக்கிளிலோ நடந்தோ ஒரு இடத்திற்குச் செல்லுதலும், சாதாரணத் தொண்டர்களையும் அருகில் அழைத்து வைத்துப் பேசுதலும் தன் கௌரவத்திற்கு இழுக்கு என்று நினைத்தல்.

---



திருவண்ணாமலை ஆதீன ஆதி ஸ்தாபகர்
தெய்வசிகாமணி (திருவண்ணாமலை கல்வெட்டு)

# உடன்பிறந்த பண்பாடுகள்

"பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லை, பிறந்து மண்மேல் இறக்கும்பொழுது கொடுபோவதும் ஒன்றுமில்லை" என்று ஒரு பெரியவர் பாடிச் சென்றார். இது நூற்றில் தொண்ணூற்றொன்பது பேரைப் பொறுத்தவரை உண்மையாயிருக்கலாம். ஆனால் நூற்றொருவர் ஆயிரத்தொருவர் இவ்விதிக்கு விலக்காயிருக்கிறார்கள். சில அறிஞர்களும் பெரியார்களும், பிறக்கும்பொழுதே அரும்பெருங் குணங்களுடன் பிறக்கிறார்கள். அரிய சாதனைகளைச் செய்யவென்றே தோன்றியவர்கள்போலத் திறமையுடன் விளங்குகிறார்கள். புவியில் நற்செயல்களைப் புரிந்து புகழையும் ஈட்டிக்கொண்டு விடுகிறார்கள். அவ்வித ஆயிரத்தொருவர்களில் நம் அடிகளாரும் ஒருவராவார். இதனை அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் நன்கு உணர முடியும்.

அடிகளாருடைய பேச்சுத்திறமை அவருடன் பிறவியிலேயே சேர்ந்து பிறந்த (Gift) ஒரு பேறாகும். வேறுசில பண்பாடுகளும், திறமைகளும் அவரைப் பிறவிமுதல் தொடர்ந்திருக்கின்றன. பொதுநலப் பணியில் அவருக்கு இருக்கும் ஆர்வம் இடைக்காலத்தில் ஏற்பட்டதல்ல. அடிகளார் பள்ளிச் சிறுவராயிருந்த காலம்முதல் பல சமயங்களில் அவரது பொதுநலத்தொண்டு ஆர்வம்

வெளிப்பட்டிருக்கிறது. அவர் பிறந்த கிராமம் மிகச் சிறியது. அங்கு ஒரு பிள்ளையார்கோவில் உண்டு. அக்கோவிலுக்குள் ஒரு சமயம் ஒரு நோய்கண்ட நாய் நுழைந்து பிள்ளையாருக்குப் பின்னால்போய்ப் படுத்துக்கொண்டுவிட்டது. உலகச் சிறுவர்களின் கல்லெறிக்கும் கொடுமைக்கும் தப்புவதற்கு அது அப்படிச் செய்ததுபோலும்! அங்கே படுத்த நாய் இறந்து பலநாள் ஆகி நாற்றமெடுக்கும்வரை அது யாருக்கும் தெரியவில்லை. ஆனால் நாற்றமெடுத்தபின் அதனை அணுகி அப்புறப்படுத்த முன் வருவாரும் அக்கிராமத்தில் எவரும் இல்லை. கிராமமக்கள் யாவரும் செய்ய முன்வராத இச்செயலை அடிகளார் பள்ளிச் சிறுவராயிருந்த காலத்தில் தாமாகவே செய்ய முன் வந்தார். புழுத்த நாயை ஒரு சாக்கில் வைத்து அப்புறப்படுத்தினர். பிள்ளையார் கோவிலை மெழுகிக் கழுவித் தூய்மைப்படுத்தினர். கிராம மக்கள் வியக்கும்படி எந்தவிதப் பயனையுங் எதிர்பாராமல் அடிகளார் செய்த தொண்டுக்கு இதுபோன்று இன்னும் எத்தனையோ சான்று காட்டலாம். அவர் உயர்நிலைப்பள்ளி மாணவராயிருந்த காலத்திலும் சங்கங்கள் நிறுவுதல். சீர்திருத்தங்கள் பேசுதல், பசனைகள் நடத்துதல் ஆகியவற்றில் ஓய்வு நேரத்தில் பெரும் பகுதியைச் செலவிடுவாராம். சமயத்தலைவராய் வந்து புகழேணியில் கால்வைத்த பின்னும் அவர் கால்வாய் வெட்டுதல், சாலை செப்பனிடுதல், குளம் சேறு அள்ளுதல், உழவாரத்திருப்பணி இவைபோன்ற செயல்களில் பேரார்வம்

காட்டித் தாகை முந்திக்கொண்டு ஈடுபட்டு வருகிறார்.

மக்கள்படும் இன்னல்களைக் கண்டால் அடிகளார் உள்ளம் குழைந்து அழுது விடுவார். காரில் செல்லும்போது வழியில் யாரும் எத்துன்பத்திலேனும் சிக்கியிருக்கக் கண்டால், காரை நிறுத்திக் கவனித்துவிட்டுத்தான் மேலே செல்வார். காக்கை வலிப்பால் பச்சிளங் குழந்தையைச் சாலையோரத்தில் தவிக்கவிட்டு ஒரு ஏழைத் தாய் மயங்கிக் கிடந்தாள். அவ்வழியே சென்ற அடிகளார் காரை நிறுத்தி அவளுக்கு மயக்கந் தெளிவிக்கச்செய்து அக்குழந்தையையும் அனுமதியுடன் திருமடத்திற்குக் கொண்டுவந்து விட்டார். இப்போது அக்குழந்தை திருமடத்தில் அரசிளங்குழந்தைபோல் வளர்ந்து வருகிறது. அரையணுவுக்கு ஆருடம் பார்த்துக்கொண்டு ஊர்ஊராய் அலைந்துதிரிந்தான் ஒரு அனாதைச் சிறுவன். அடிகளார் திருக்கண் நோக்கால்அவன் இன்று அத்தொழிலையே மறந்து திருவாசகம் இருவேளை ஓதி மணிவாசகர் மாணவர் இல்லத்தில் கல்வியும் பயின்று வருகிறான். ஒரு சமயம் அடிகளார், "கிராமங்களில் மக்கள் படும் துயரைக்கண்டால். நான் அவர்கள்முன் காரில் செல்லுவதுகூட அதிகமாகத் தெரிகின்றதே சண்முகம்" என்று என்னிடம் உளம் விட்டுக் கூறினார்கள். உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழுந்த அந்த அன்புநாதம் இன்னும் என் செவிகளில் ஒலித்துக்கொண்டே இருக்கின்றது.

எவ்வளவு தூரம் உளப்பண்பு இருந்தால் புகழ் நிலையை யடைந்துவிட்ட ஒரு பெருமகனூர்க்கு ஏழைகளைப்பற்றி இவ்வளவு தூரம் சிந்தனைவரும் என்பது உய்த்துணரத் தக்கது.

பேச்சுத்திறமை பெற்றதுபோலவே அடிகளார், நிதானம் இழக்காமல் விவாதம் செய்யும் திற மையையும் பெற்றிருக்கிருர். அவர் சொற்பொழிவு களில் யாரையும் கொடுஞ் சொற்களால் தாக்கு வதைக் காணவே முடியாது. பேசவும், விவா தம் செய்யவும் தெரிந்தால் போதாதென்று நினைத்தோ என்னவோ கட்டுரை எழுதுதல், நடித் தல், நீந்துதல், சைக்கிள், கார் ஓட்டுதல் முதலிய திறமைகளையும் அவர் தனதாக்கிக்கொண்டிருக் கிருர். இத்தனை திறமைகளும் இருந்தாலும், ஆட் களை அறியும் திறன் இல்லாவிடில் ஒருவர் பொது நலப்பணியில் புகழ்பெற முடியாது. யார் யார் எத்தன்மையர், யார் யாரை எந்த அளவு பயன் படுத்திக்கொள்ளலாம் என்று கணக்கிடுவதிலும் அடிகளார் வல்லவர். உழைப்புக்கும் பழுத்த வய திற்கும் அவர் அதிக மதிப்புக்கொடுப்பார். திரு வண்ணமலை ஆதீனத்தில் 30 ஆண்டுகளுக்குமேல் ஒருபெரியவர் தம்பிரானுக இருந்தார். இப்போது அவர் பழுத்த கிழவரா யிருக்கிருர். முப்பதாண்டு கட்குமேல் பல மகாசன்னிதானங்களின் கீழ்த் தம் பிரானுக இருந்துநாணயமான உழைப்பால் நீடித்த ஒருவரை அவரது ஆயுட்காலத்திற்குள் உயர்த்தி

வைத்து மகிழ்விக்க வேண்டுமென்ற ஆசை அடிகளார்க்கு உண்டாகியது. அவ்வளவுதான்; அவரை ஆதீன இளவரசாக 6—12—54-ல் நியமித்துப்பட்டமும் கட்டிவிட்டார். யாரும் இதுவரை வழங்கத்துணியாத இவ்வளவு பெரிய பெருமையைக் கடைசிக் காலத்தில் அந்த சுப்பிரமணியத் தம்பிரானுக்கு வழங்கி நடராச தேசிகர் என்ற பெயரையும் சூட்டினர். சகலரும் சகல மரியாதைகளும் அவருக்குச் செய்யும்படியாகவும் செய்தார். வயதிற் பழுத்த ஒருவருக்கு இளவரசுப்பட்டம் கட்டியது ஏன் என்று நான் ஒருநாள் பத்திரிகையாசிரியர் கேட்கும் தோரணையில் கேட்டு வைத்தேன். அடிகளார் கூறிய பதில் இதுதான்.



*"என் தந்தையையொத்த வயதுடையவ இவருக்கு நான் இப்போது அளித்த வாழ்வில் அளவற்ற மகிழ்ச்சியிருக்கிறது. காரில் ஏறும்போதும் இறங்கும்போதும் அவர் அடையும் மகிழ்ச்சிக்கு அளவில்லை. அவருக்கு நடைபெறும் ஒவ்வொரு மரியாதையையும் கண்டு அவர் அடையும் மகிழ்ச்சி எனக்கும் மகிழ்ச்சியையும் இன்பத்தையும் அளிக்கிறது."*

பிறர் இன்புறக்கண்டு தாமும் இன்புறும் இவ்வித மாபெரும் பண்பாடு வாய்க்கப்பெற்ற அடிகளாருக்குப் பதவிமோகமும் சிறிதும் கிடையாது. பிறருக்குப் பட்டங்களும், பதவிகளும் வழங்கி அவர்களைத் தொண்டுசெய்ய வைப்பது அடிகளாருடைய திறமைகளில் ஒன்று. ஆரம்பத்தில் செயல்கள் செவ்வனே நடைபெறுவதற்காக ஒரு குறிப்பிட்ட காலம்வரை எந்தத் தலைமைப் பதவியையும் அடிகளார் ஏற்றுக்கொள்வார். பின்பு தகுதியுடைய தொண்டர் கிடைக்கும்போது அவருக்கு அப்பதவியைத் திடீரென்று கொடுத்து உற்சாகப்படுத்திவிடுவார். அருள்நெறித் திருக்கூட்டம் நாட்டில் வலுப்பெற்ற ஒரு இயக்கமாக ஆகும்வரை அதன் தலைமைப் பதவியை அடிகளார் ஏற்றிருந்தார். அலுவலகத்தையும் குன்றக்குடியிலேயே வைத்துக்கொண்டு ஆவன பல செய்தார். அது தமிழ்நாடெங்கும் வேரூன்றிவிட்டதென்ற நிலை எய்தியதும் அருள்நெறித்திருக்கூட்டத் தலைமைப் பதவியைப் பிறருக்குக் கொடுத்துவிடுவதில் அடிகளார் ஆர்வங்காட்டினார். அவ்வாறே 10—7—54-ல் இராசகோபாலாச்சாரியார் தலைமையில் நடைபெற்ற முதல் தமிழ் மாநில அருள்நெறி மாநாட்டில் இலஞ்சி திரு. ஐ. ஏ. சிதம்பரம்பிள்ளை அவர்களிடம் அருள் நெறித் தலைமைப்பதவியை ஒப்புவித்துவிட்டார். எல்லாவகையாலும் தகுதியுடையஅவரை அப்பதவிக்குத் தேர்ந்தெடுத்த அடிகளாரின் ஆராயுந் திறனைப் போற்றுதாரில்லை. திரு. பிள்ளை அவர்கள்

அடிகளாரின் அன்புக்கட்டளைக்குப் பணிந்து தலைமைப் பதவியை ஏற்றுச் சிறந்த தொண்டாற்றுகிறார். "தமிழ்நாடு அருள்நெறித் திருப்பணி மன்றம்" என்னும் பெயரில் சமூகத்தொண்டு புரியும் குழாம் ஒன்றை வளர்க்கவும் அவர் தீவிரமாக முயற்சி செய்து வருகிறார். குன்றக்குடி அடிகளாரை நிரந்தரத் தலைவராகவும் திருப்பெருந்திரு பெருங்குளம் செங்கோல் மடாதிபதி அவர்களை நிர்வாகத் தலைவராகவும் திரு. ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை அவர்களைச் செயலாளராகவும் கொண்டு இத்திருப்பணி மன்றம் 10—6—55-ல் பதிவு செய்யப்பட்டது, பள்ளிகள், மருத்துவவிடுதிகள், தாய் சேய் நல இல்லங்கள் முதலியனவற்றை நிறுவுதலும் ஆக்க வேலைகளில் இளைஞர்களுக்குப் பயிற்சியளித்தலும் இத்திருப்பணி மன்றத்தின் முக்கிய குறிக்கோள்களாகும்.

அடிகளாரின் திறமைகளில் இறுதியாக ஒன்றைக் குறிப்பிடவேண்டும். அவர் ஊர் ஊராகச் சென்று சொற்பொழிவு நிகழ்த்துவதிலும், சேரித் தொண்டு, நில நன்கொடையாத்திரை முதலியவற்றில் பங்குகொள்வதிலும் தம் நேரத்தைச் செலவிட்டு ஓய்வில்லாமல் சுற்றி வருவதால் திருமடத்தின் நிருவாகம் சரியாக நடைபெற வழியுண்டா என ஐயப்படுவாருண்டு. ஆனால் அவரது நிருவாகத்திறமை அந்த ஐயப்பாட்டிற்கே இடம் வைக்கவில்லை. அடிகளார் திருவண்ணாமலை ஆதீனத் தலைவராக வந்தபிறகு திருமடத்தின் வருமானம் பெருகியிருக்கிறது. ஆதீனத்திற்குட்பட்ட சொத்

துக்கள் அனைத்தையும் அடிகளார் நேரிலேயே சென்று பார்வையிட்டு அவற்றின் நிர்வாகத்தைப் பல வகைகளில் திருத்தியமைத்திருக்கிறார்கள். இதற்கு முன்பு அந்த ஆதீனத்திலிருந்த பல தலைவர்களுக்குத் தங்கள் சொத்துக்கள் எங்கெங்கு இருக்கின்றன என்றுகூடத் தெரிந்திருப்பதில்லையாம். ஆனால் அடிகளார் கால்படாத நிலமும் கண்படாத திருமடச் சொத்தும் அனேகமாக இல்லை. ஆதீனத்திற்குச் சொந்தமான பல தரிசு நிலங்கள் இவர்காலத்தில் நன்செய் ஆக்கப்பட்டிருக்கின்றன. பல புதுக்கட்டிடங்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன. திருப்பரங்குன்றத்திலும் மதுரையிலும் திருவண்ணாமலை ஆதீனத்திற்குச் சொந்தமான இடங்களில் ஆதீன மேலாளர் திருச்சங்கரகுமாரக்குருக்கள் மேற்பார்வையில் புதிய கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இவ்வகையிலெல்லாம் ஆதீனத்தின் வருமானம் மிகவும் பெருக்கப்பட்டிருக்கிறது.

## மலேயாச் சுற்றுப் பிரயாணம்

"திரைகடலோடியும் திரவியம் தேடு" என்பது தமிழ்ப்பழமொழி. திரவியம் தேடும் நோக்கமின்றிச் சிவநெறி பரப்பும் நோக்கத்துடன் கடல் கடந்த பெருமக்கள் வரலாறுஎதுவும் நாம் கேட்டதில்லை. பல தலைமுறைகளுக்கு முன்பே தமிழகத்தைப் பிரிந்து வெளி நாடுகளில் சென்று வாழ்ந்து வரும் தமிழர்களிடத்தும், வியாபாரம் மற்றும் பல

காரணமாக வெளிநாடுகளில் சென்று வாழும் தமிழர்களிடத்தும் சைவப் பயிரைத் தழைக்கச் செய்யவும் அவர்கள் நிலையை ஆய்ந்து வரவும் 28—12—54ல் அடிகளார் மலேயாவுக்குப் பிரயாணம் தொடங்கினுர்கள். பினங்கில் 3—1—55ல் போய்ச் சேர்ந்ததுமுதல் 27—3—55வரை அடிகளார் ஏறத்தாழ மூன்று மாதங்கள் மலேயா, தாய்லாந்து, இந்தோ சீன, இந்தோனேசியா ஆகிய நாடுகளில் இடைவிடாமல் சுற்றுப் பிரயாணம் செய்தார். பல ஆயிரக்கணக்கான மைல்கள் சூருவளி வேகத்தில் சுற்றுப்பிரயாணம் செய்து லட்சக்கணக்கான மக்கள் கூடிய பல நூறு கூட்டங்களில் சொற்பொழிவாற்றினுர். தமிழ்ச் சமுதாயம் பரவிக்கிடக்கும் இடங்களில் ஒன்றுவிடாமல் பார்வையிட்டார். அவர்களது வாழ்க்கை நிலைமைகளை ஆராய்ந்தார். எண்ணிறந்தோர் கேள்விகளுக்குப் பதிலிறுத்து எளிதாக ஐயங்களைப் போக்கினுர். தமிழர்களிடையே ஒற்றுமை நிலவவேண்டியதன் இன்றியமையாமையை வற்புறுத்தனுர். அங்கு நடைபெற்ற திருப்பணிகளில் உடல் உழைப்பையும் நல்கிப் பங்குகொண்டார். மலேயாப் பல்கலைக் கழகத்தல் மாபெரும் நூல் நிலையம் அமைக்கத் தமிழ்முரசு ஆசிரியர் திரு. ஜி. சாரங்கபாணி அவர்கள் தொடங்கியிருக்கும் நூல்நிலைய நிதியில் தம்மை முதல் நன்கொடையாளராகப் பதிவுசெய்துகொண்டார். தொழிலாளர் நிவாரண நிதி முதலிய மற்றும் பல நிதிகளுக்கும் பொருளீந்தார். பலருடைய தொண்டினைப் பாராட்டிப் பட்டங்கள் வழங்கினுர். மலேயா

அருள்நெறித் திருக்கூட்டம் ஒன்றையும் நிறுவி னர். இவ்விதம் அடிகளார் கடல்கடந்து சென்று தொண்டாற்ற அங்கு தமிழ்முரசு ஆசிரியர் ஜி. சாரங்கபாணி, தமிழ்நேசன் மானேஜர் நடரா சன், மனோன்மணி விலாச புத்தகசாலை அதிபர் திரு. இராமசாமி, கோலாலம்பூர் ஸ்ரீமகாமாரியம் மன் கோவில் தர்மகர்த்தா மதுரை சு. பழனிவேல் பிள்ளை, திரு. கா. இராமநாதன் செட்டியார் மற் றும் பலர் பேருதவியாக நின்று சுற்றுப்பிரயா ணத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வைத்தார் கள். சிறந்த தமிழன்பரும் தேசியவாதியுமான மனோன்மணி இராமசாமி அவர்கள் அடிகளாருடன் கூடவே பல இடங்களுக் குச் சுற்றுப்பிரயாணம் செய் தவர்களில்ஒருவராவார். பல நற்செயல்களுக்கு முந்தி நின்று நன்கொடைகள் வழங்கும் அவர் அடிகளா ரது மலேயா வருகையின் நினைவாகத் திருவாசக பதிப் பொன்றை வெளியிட்டு அன்பர்களுக்கு இலவச மாக வழங்கினார்கள். மேலும் தமிழினம் தமிழ் மொழி, தமிழர் சமயம், பண்பாடு இவற்றின் வளர்ச் சிக்கான சிறு சிறு வெளியீடுகளை அடக்க விலையில் வெளியிடும் அருள்நெறிப் பதிப்பகம் ஒன்றினை நிறுவ 1001 டாலர்களையும் நன்கொடையாக வழங் கினார்கள். திரு. இராமசாமியைப்பற்றி அடிகளார்


இராமசாமி

தாயகம் திரும்பியவுடன் பின்வருமாறு குறிப்பிட்டார்.

"சிறிதுதூரப் பிரயாணம்வரை நானும் மனோன்மணி இராமசாமியும் மூன்றுவது மனிதர்கள்போல இருந்தோம். சிறிது பழகியதும் திரு. இராமசாமியின் களங்கமில்லா உள்ளமும்தமிழ்ப் பற்றும் தமிழினப்பற்றும் என்னை ஈர்த்துவிட்டன. பிறகு நாங்கள் ஒருவர்க்கொருவர் மனங் கலந்து மிகுதியாகப் பழகிவிட்டதால் எங்கள் பிரிவு வருத்தம்தந்தது."

இந்தியாவிலிருந்து அடிகளாருடன் சேர்ந்து திரு. கே. எம். சுப்பிரமணியம் எம். ஏ., திரு. அருணாசலம், பணிவிடைப் பையன் சின்னஅண்ணாமலை ஆகியோர் மலேயாவில் சுற்றுப்பிரயாணம் செய்தனர். இதுவரை யாருடைய சுற்றுப்பிரயாணமும் இந்த அருள்நெறிச் சுற்றுப் பிரயாணம்போல் வெற்றிகரமா யிருந்திருக்கமுடியாதென்று அவர்கள் கருத்துத் தெரிவித்தார்கள்.

அடிகளார் வாழ்வில் அவருக்குப் பல ஆபத்துக்கள் நேர்ந்திருக்கின்றன. ஆனால் அவை தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போகுமென்பதுபோல் திருவருள் வாய்ப்பால் அவரை ஒன்றும் செய்யாமல் நீங்கிவிடுமென்பது பலசமயம் மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

குன்றக்குடி சண்முகநாதன் கோயிலில் ஒரு யானை இருக்கிறது. அந்தயானைக்கு நாள்தோறும் அடிகள் தேங்காய் கொடுத்துவருவது வழக்கம்.

'சுப்பா' என்றழைத்தால் அது உடனே துதிக்கையை நீட்டி அஞ்சலிசெய்து தேங்காயைப் பெற்றுக்கொள்ளும். ஒருநாள் அந்த யானை திடீரென அடிகளாரையே கீழே தள்ளிப் புரட்டத்தொடங்கிவிட்டது. யானையின் பாதத்தில் நசுக்குருமல் அவர்கள் தெய்வாதீனமாகத் தப்பினர்கள்.

அடிகளார் பட்டத்துக்கு வந்த புதிதில் அவர்கள் திருவண்ணமலைத் திருக்கார்த்திகைக்குச் சென்றார்கள். அவர்கள் சென்ற கார் குடைசாய்ந்து சாலையிலிருந்து வெகுதூரத்தில் தூக்கியெறியப்பட்டுச் சேதமடைந்தது. ஆனல் அடிகளார் ஒரு சிறிதும் அடிபடாமல் தெய்வச் செயலால் தப்பினர்கள். இலங்கை யாத்திரை சென்றிருந்தபோதும் அடிகளார் சென்ற காரின் ஒரு சக்கரம் தானகக் கழன்று கார் விபத்து ஏற்பட்டது. அப்போதும் அடிகளார் திருவருட் செயலால் ஒரு தீங்குமின்றித் தப்பினர்கள்.

1954-ல் கோவை மாவட்ட மாநாட்டுக்குச் சென்று திரும்பும்போதும் அடிகளார் இப்படி ஒரு விபத்தினின்றும் தப்பியுள்ளார்கள். இவ்விதம் விபத்துக்கள் மலேயாச் சுற்றுப்பயணத்தில் ஏதேனும் ஏற்பட்டதா என்று கேட்டேன். பல ஆயிரம் மைல்கள் இரவு பகலென்று பாராமல் சுற்றியதாகக் கேட்டதால் எனக்கு அந்த ஐயம் ஏற்பட்டது. அவ்விதம் ஒன்றுமே நிகழவில்லையென்ற பதில் மகிழ்ச்சி யளித்தது.

---





# குன்றக்குடி அடிகளார்

செட்டி நாட்டார் பெயர்கள் நீள நீளமாயிருக்கும். அவற்றைப் பிறபகுதியினர் பார்த்துக் கேலியாகப் பேசுவதும் எழுதுவதும் உண்டு. திருமடங்களின் தலைவர்கள் பெயர்களைக் கேட்டால் அவை செட்டிநாட்டுப் பெயர்களையும்விட நீளமாயிருக்கும். நம் அடிகளாரின் முழுநீளப்பெயர் ***திருக்கைலாய பரம்பரை திருவண்ணுமலையா தீனம் குன்றக்குடி 45-வது மகா சந்நிதானம் திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணுசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்*** என்பதாகும். திருமடங்களின் சம்பிரதாயப்படி அவர்களை இப்பெயரால்தான் குறிப்பிட்டுக்கூற வேண்டும். இப்பெயரில் ஒவ்வொரு சொல்லும் ஒரு பொருளைச் சுட்டும். இவ்வாதீனம் முதன் முதலில் திருவண்ணுமலையில் நிறுவப்பட்டது. அதை நிறுவியவர் திருக்கைலாய பரம்பரைத் தெய்வசிகாமணி என்பவராவார். அவர் வழிவழியாக வந்த 45-வது மகாசந்நிதானம்தான் நம் அடிகளார், திருவண்ணுமலையில் நிறுவப்பட்ட இவ்வாதீனம் இடைக்காலத்தில் குன்றக்குடியைத் தலைமை நிலையமாகக் கொண்டு பணியாற்றத் தொடங்கியுள்ளது. அருணுசல தேசிகரென்பது அடிகளின் தீட்சாநாமம் இன்ன பிற செய்திகளையெல்லாம் அடிகளின் முழுப்பெயர் அறிவித்து நிற்கிறது. இத்தனை நீளமான பெயரைக் ***'குன்றக்குடி அடிகளார்'*** என்ற இரண்டு சொற்களில் உலகுக்கு அறிமுகப்படுத்தி வெளி

பிட்டு அப்பெயர் இன்று சிறப்புற்று விளங்குவதைக் கண்டு மகிழும் பெருமை மதுரையிலிருந்து வெளி வரும் "தமிழ் நாடு" நாளிதழையே சாரும்.

திருவண்ணுமலை ஆதீனத் தலைவர்களிலொருவர் ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்பு குன்றக்குடி, பிரான்மலை முதலிய ஐந்துகோயில் தேவஸ்தான மேற்பார்வை உரிமையை இராமநாதபுரம் அரசர்களிடத்திலிருந்து பெற்ருர். அதுமுதல் பிரான்மலையில் தங்கள் ஆன்மார்த்தமூர்த்தியாகிய காளத்திநாதரை எடுத்துவந்து வைத்து அங்கேயே அவருக்குப் பின்வந்த மகா சந்நிதானங்கள் தங்கி விட்டனர். பிரான்மலை அதிகமான மக்கள் போக்கு வரவுக்கு வாய்ப்பளிக்காத இடமாக இருந்த காரணத்தாலோ என்னவோ மிக அண்மைக் காலத்தில் குன்றக்குடிக்குக் காளத்தி நாதர் பூசைகொண்டு வரப்பட்டு அதுமுதல் குன்றக்குடித் தலம் திருமடத்தின் தலைமை நிலையமாகத் திகழ்ந்து வந்தது. குன்றக்குடிக்குத் திருமடத்தின் தலைமை நிலையம் வந்தபின்னும் அதற்கு முன்னும் ஆட்சிபீடத்தில் இருந்தவர்களில் அருணுசலதேசிக சுவாமிகள் நாடுமுழுவதும் மிக அறிமுகம் உடையவராகக் கீர்த்தியுடன் விளங்குகிருர்கள். அவர்களுடைய ஆட்சிக்காலத்திற்குள் தமிழ்ச் சமுதாயம் இன்னும் எத்தனையோ நற்செயல்களையும் சிறப்பையும் எதிர்பார்க்கிறது. அவர்கள் தமிழகம் முழுதுக்கும், ஏன் உலகத்திற்கே வழிகாட்டியாக நின்று துணைபுரியவேண்டும் என்றுகருதும் அனைவரது ஆசையும் நிறைவுறுமாக.

**வாழ்க உலகெலாம்!**

Review appeared in theHINDU on 16-1-55

---

# KUNRAKKUDI ADIGALAR

By M. SP. SHANMUGAM, M. A.

(Published by Parimala Pathippagam, North Chitrai St. Madurai,)

Price Re. 1/-

---

Sri-La-Sri Arunachala Desika Paramacharya Swamigal of the Tiruvannamalai Mutt, Kunrakkudi, Ramanathapuram District has established for himself a name as one of the few men in contemporary history who are doing their best to bring about a spiritual regeneration in this land. By his founding Arulneri Kazhagams, throughout the Tamil land he is a force to be counted on by the propagandists of atheism who for reasons of their own, are flooding the land with their speeches and publications. The Adigal has had his early training first under great Tamil scholars, and then in the Dharmapuram Mutt; and, when he was raised to the gadi at Kunrakkudi, he found himself fully equipped for the task he had taken upon himself. By temperament and training he possesses excellent qualities for leadership **and this biography which is written with great reserve and a sense of truthfulness, develops the story of his life in a charming manner. Language and style are suitable to the subject and as a biography it is a model which may be followed.**

---